# தமிழும் பிராகிருதமும்

பன்மொழிப்புலவர்

மு.கு. ஜகந்நாத ராஜா




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# தமிழும் பிராகிருதமும்

பன்மொழிப் புலவர் மு. கு. ஜகந்நாதராஜா
தலைவர், மணிமேகலை மன்றம்
இராஜபாளையம்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
டி. டி., டி. ஐ. (அஞ்சல்) தரமணி, சென்னை-600 113

முனைவர் மு. வரதராசனார்
அறக்கட்டளைச் சொற்பொழிவு-2
(19, 20-12-90)

Dr. M. VARADHARACANAR ENDOWMENT LECTURE No. 2
Endowment Lecture Publication No. 29

---

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | Tamiḻum Prākirutamum |
| Author | : | Paṉmoḻippulavar<br>M. G. Jagannatharaja, President,<br>Manimekalai Manram, Rajapalayam |
| Publisher & copy right | : | International Institute of Tamil Studies, T.T.T.I. (Post), Taramani, Madras-600 113. |
| Publication No. | : | 163 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | July, 1992 |
| Edition | : | First |
| Paper used | : | 60 GSM White Creamove TNPL Paper |
| Size | : | 21 × 14 cms |
| Printing types | : | 10 Point |
| No. of copies | : | 1200 |
| No. of Pages | : | VII+75 |
| Price | : | Rs, 12/- |
| Printers | : | Kavinkalai Acchagam, Madras-41, Ph. 417141. |
| Artist | : | SATHYA |
| Subject | : | Tamil and Prakrit-a comparative study |


---

# பதிப்புரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன முன்னோடிகளில் ஒருவரும், தமிழறிஞருமான முனைவர் மு. வரதராசனாரைச் சிறப்பிக்கு முகமாகத் தோற்றுவிக்கப்பட்ட 'முனைவர் மு. வரதராசனார் அறக்கட்டளை'யின் இரண்டாவது சொற்பொழிவு இந்நூல்.

தமிழுக்கும் பிற மொழிகளுக்கும் உள்ள தொடர்பினை ஆய்ந்துணர்த்த விரும்பிய அன்றைய இயக்குநர் முனைவர் சிலம்பொலி செல்லப்பன் அவர்கள் அறிஞர் மு. கு. ஜகந்நாதராஜா அவர்களிடம் தமிழும் பிராகிருதமும் பற்றிய ஒப்பியல் சொற்பொழிவிற்கு அழைப்பு விடுத்தார். அதன் அடிப்படையில் 'தமிழும் பிராகிருதமும்' எனும் சொற்பொழிவினை டிசம்பர் 1990இல் நிகழ்த்தினார். அதன் நூல் வடிவம் இப்பொழுது வெளிவருகிறது.

தமிழருக்குப் பிராகிருத இலக்கண, இலக்கியங்களை அறிமுகப் படுத்தியும் ஆங்காங்கே தமிழோடு ஒப்பிட்டும் தம் பணியை நூலாசிரியர் நிறைவேற்றியுள்ளார். நூலுள் சில முடிபுகள் கருத்து மாறுபாட்டிற்கும் மீளாய்விற்கும் இடந்தருவன. நிறுவனத்தின் வழி, பிராகிருத மொழியைத் தமிழுலகிற்கு அறிமுகப்படுத்த உதவிய நூலாசிரியருக்கு நிறுவனம் நன்றி தெரிவிக்கின்றது.

நிறுவனத்தில் இவ்வறக்கட்டளை நிறுவ உதவிய சான்றோர்; சொற்பொழிவிற்கு ஏற்பாடு செய்த மேனாள் இயக்குநர் முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்கள்; நூலாக்கத்திற்குத் துணை நின்ற இயக்குநர் (பொறுப்பு) முனைவர் அன்னி தாமசு அவர்கள்; மெய்ப்பு திருத்திய திரு சு. சண்முகவேலாயுதம்; சொல்லடைவு தயாரித்துதவிய ஆய்வு மாணாக்கர் அ. லோ. பழனிசாமி; செவ்வையாக அச்சிட்டுத் தந்துள்ள கவின்கலை அச்சகத்தார் அனைவருக்கும் எங்கள் நன்றி.

சென்னை-113
23-7-92

அன்புடன்
**ச. சிவகாமி**
அறக்கட்டளைப் பொறுப்பாளர்



## ஆசிரியர் அறிமுகம்

பெயர் : திரு. மு. கு. ஜகந்நாதராஜா

பிறப்பு : 26-7-1933

தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், இந்தி, சமஸ்கிருதம், பாலி, பிராகிருதம், ஆங்கிலம் எனப் பன் மொழிப் புலமையுடைய இந்நூலாசிரியர் தமிழில் 11 முதனூல்களையும் 20 மொழிபெயர்ப்புகளையும் கண்டவர். ஆய்வாளரும் படைப்பாளருமாகப் பன்முகத் திறமை கொண்ட இவர் தமிழ் நூல்களைத் தெலுங்கு, கன்னடம், மலையாளத்திலும் மொழி பெயர்த்துச் சிறப்பித்துள்ளார். இவரது படைப்புகள் இந்தி, ஆங்கிலம், செர்மன், ரஷ்யன் முதலான பிற மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்ட பெருமையினையும் உடையன. பல நிறுவனங்களின் பாராட்டுகளைப் பெற்றுள்ள இவர் 1990இல் சாகித்திய அகாதெமி பரிசினை 'ஆமுக்த மாலா' தமிழ்மொழி பெயர்ப்பிற்காகப் பெற்றுள்ளார்.

1960இல் மணிமேகலை மன்றத்தை, இராஜபாளையத்தில் நிறுவித் தமிழ்ப்பணியாற்றிவரும் இவர், 1983இல் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்காகத் தமிழ், ஆந்திர வைணவ சமயத் தொடர்பு பற்றிய ஆய்வினை நிகழ்த்தியுள்ளார். தொடர்ந்து பல தமிழாய்வுகளில் ஈடுபட்டுள்ளார்.

# முன்னுரை

தமிழகத்தின் மிகச் சிறந்த பேரறிஞர்களில் ஒருவராகிய டாக்டர். மு. வரதராசனார் அவர்கள் அறக்கட்டளை சார்பில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் என்னைத் ''தமிழும் பிராகிருதமும்'' எனும் தலைப்பில் சொற்பொழிவாற்றப் பணித்தமைக்காக என் உளமார்ந்த நன்றியினை முதற்கண் தெரிவித்துக்கொள்கிறேன். எனது நெருங்கிய நண்பரும், சிறந்த அறிஞரும் விமரிசகருமாகிய இயக்குநர் டாக்டர். சிலம்பொலி செல்லப்பன் அவர்கட்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

டாக்டர். மு. வ. அவர்கள் தமிழிலக்கிய வரலாற்றில் தன் சுவடு பதித்த பேரறிஞர். பல்துறை விற்பன்னர் மரபுக்கும் புதுமைக்கும் மாண்புறப் பாலம் அமைத்த மாபெரும் சிந்தனையாளர். சங்க இலக்கியத்தை நன்முறையில் எளிமைப்படுத்தி விளக்கிய ஆய்வுக் கட்டுரைகள் பல படைத்தவர். தனக்கெனத் தனித் தமிழ் நடை உருவாக்கிக் கொண்டு இனிய புதினங்கள் படைத்தளித்த எழுத்தாளர். தமிழ் இலக்கிய வரலாறு சிறப்புற இயற்றித் தந்தவர். மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் துணைவேந்தராக இருந்து சிறப்புற்றவர். சிறந்த மொழியியலறிஞர். அத்தகு பேரறிஞருடைய நினைவுச் சொற்பொழிவாக அமைந்ததில் மகிழ்ச்சியுறுகின்றேன்.

டாக்டர். மு.வ. ''மொழியியற் கட்டுரைகள், ''மொழி வரலாறு'' எனும் நூல்களில், பிராகிருத மொழி குறித்தும் அதற்கும் தமிழுக்கும் உள்ள தொடர்பு குறித்தும் பல சிந்தனைக்குரிய கருத்துக்களை வெளியிட்டிருக்கிறார்.

''இந்தியின்தாய்'' என்றொரு கட்டுரை அவர்கள் எழுதியுள்ளார்கள். ''மொழியியற் கட்டுரைகள்'' எனும் நூலில் இக் கட்டுரை உள்ளது.

''இந்தி முதலிய மொழிகள் திராவிட மொழியைப் பின்பற்றி அமைந்துள்ளன.''

''இந்தி முதலிய மொழிகள் வடசொற்பெருக்கம் உடையன வேனும் அவற்றின் அமைப்புக்குக் காரணமான தாய் மொழி திராவிட மொழி என்பது நன்கு விளங்கும்.''

என்று குறிப்பிட்டுள்ளார். இது குறித்து அவர்களிடமே நான் விவாதித்தது என் நினைவுக்கு வருகிறது.

'மொழி வரலாறு' எனும் நூலில்,

> "மக்களின் மொழியாக வளர்ந்த பிராகிருத மொழிகளில் வட மொழிக் கூறு தவிர, திராவிடக் கூறுகளும் இருந்தன."
>
> "ஆரியர்கள் இந்தியாவிற்குள் புகுந்த போது திராவிட மொழி களின் செல்வாக்கால் அவர்களின் மொழியில் மாறுதல் ஏற்பட்டன என்னும் கொள்கை, மொழி நூலார் பலர் உடன் பட்ட கொள்கை யாகும்."
>
> "பாலி மொழி என்பதும் பிராகிருதம் போல வட இந்தியாவில் வாழ்ந்த பழங்காலத்து மக்கள் வடமொழியும் திராவிட மொழியும் கலந்து பேசிய பேச்சாகும்."

என்று கூறியுள்ளார். இது போல பிராகிருத மொழி குறித்த பல சிந்தனைகளைக் கூறியுள்ளார். பிராகிருதம் குறித்துப் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளைக் கடுத்து டாக்டர். மு. வ. சிந்தித்துள்ளார். ஆதலின் அவரது நினைவுச் சொற்பொழிவாகத் "தமிழும் பிராகிருதமும்" என்ற பொருளில் பேசுவது பொருத்த மான ஒன்றாகும்.

பொதுவாக வடமொழியாகிய சமஸ்கிருதத்தைப் பற்றித் தெரிந்த அளவு பாலி, பிராகிருத மொழிகளைப் பற்றியும் அம் மொழிகளின் அமைப்பு, வரலாறு, இலக்கிய, தத்துவ வளம் குறித்தும் தமிழறிஞர்கள் அறிந்திருக்கவில்லை என்பது வருந்தத் தக்கது. சமஸ்கிருதத்திற்குத் தமிழ்நாட்டறிஞர்கள் பெருந் தொண் டாற்றியுள்ளனர். அது போன்றே பாலி, பிராகிருத மொழிகளிலும் தமிழ் நாட்டறிஞர்கள் பெருந் தொண்டாற்றியுள்ளனர். பாலி பவுத்தமதச் சிந்தனைகட்கு உறைவிடமாகும். பிராகிருதம் சமண மதச் சிந்தனைக்கு உறைவிடமாகும், இவ் இரு மொழிகளிலும் உயர்ந்த படைப்புக்கள் இலக்கிய, தத்துவத்துறைகளில் உருவாகி யுள்ளன. அவற்றை அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமை யாததாகும். ஆதலின் ஈண்டுப் பிராகிருத மொழியைக் குறித்தும் அம்மொழி இலக்கிய, தத்துவ வளம் குறித்தும் அறிமுகப்படுத்தும் பாங்கிலும், தமிழ்மொழி இலக்கியங்கட்கு உள்ள தொடர்புகளை ஒப்பிட்டாயும் வகையினும் இச்சொற்பொழிவுகள் அமைந் துள்ளன.

இச்சொற்பொழிவுகள் நிகழ்த்தப் பணித்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் டாக்டர். சிலம்பொலி செல்லப்பன் அவர்கட்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

# உள்ளே

# மொழிகளின் வரலாறு

மனிதன் ஏதோ ஒரு யுகத்தில் பேசத் தொடங்கினான். படைப்பின் வளர்ச்சி நிலையில் எப்போது பேசத் தொடங்கினான் என்பதைத் தெளிவாக யாரும் கூறிவிட முடியாது. எனினும் மனிதனின் அறிவியல் வேட்கை அதைக் கண்டுகொள்ளத் தூண்டியது. சில சிந்தனையாளர் ஒரு சில கருத்துகளைக் கூறிச் சென்றுள்ளனர். அவையெல்லாம் ஓரளவே விளக்கம் தருபவை யாகும்.

படைப்பைப் பற்றி நாம் அறிந்துகொள்ள முடிவதில்லை. நாமோ எத்தனையோ யுகங்களுக்குப் பின் நின்று அதைத் தெரிந்து கொள்ள முயல்கின்றோம். ஆனால் நமக்கு முன்பு பனி மூட்டங் களே நிறைந்துள்ளன. தெளிவான காட்சிப் புலப்பாடுகள் இல்லை.

கடலின் கரையில் இருந்து ஒருவன் காணும்போது ஒருசில மைல் தூரமே கண்ணுக்குப் படுகிறது. தொலைநோக்குக் கண்ணாடி மூலம் காணும் அறிஞனுக்கு இன்னும் அதிக தூரம் தென்படலாம். எனினும் அதற்கும் அப்பாலுக்கப்பால் வெகு தொலைவு கண்ணுக் கெட்டாமல் இருக்கிறது. வானவெளியும் அப்படித்தான். எட்ட எட்ட மீண்டும் வெகுதொலைவு தென் படுகிறது. அதுபோலவே பழமையான சரித்திரங்களும். நமக்குப் புலப்படாதவையே மிகுதி. மொழியின் வரலாறும் அப்படித்தான். மனிதக்குரங்கிலிருந்து மனிதன் தோன்றினான் என்று டார்வினின்

கூர்தலறக் கோட்பாடு கூறுகிறது. முதல் மனிதன் எங்குத் தோன்றினான் என்பதும் தெளிவாகவில்லை.

மனிதன் பேசிய மூலமொழி எது? என்றும் யாரும் கூறிவிட முடியாது. அந்த மொழிக்குப் பெயருமில்லை. கால இடங்களையும் கணிக்கமுடியாது.

ஒரு விதையிலிருந்து தளிர்விட்டு, செடியாகி, கிளைகளாகி, இலைகளோடும் பூக்கனிகளோடும் பூத்துக் குலுங்கும் ஒருமரம் இருக்கிறது. அதிலுள்ள மேற்குமூலைக் கிளையொன்று, தானே மூலம், விதைக்கும் தனக்கும்தான் நேரடித் தொடர்புண்டு என்று வாதித்தல் எத்தனை அறிவீனமோ, அது போன்றதே இன்றுள்ள ஏதாவதொரு மொழி தானே மூலம் என வாதிப்பதுமாகும். கிழக்கு மூலைக் கிளை யொன்றும் அதுபோலவே வாதிக்கும் அல்லவா?

ஒரே மூல மொழியிலிருந்தே எல்லா மொழிகளும் தோன்றின என்று பொதுப்படக் கூறலாம். முப்பதாயிரம் ஆண்டுகட்கு முன்பே மொழிகள் தோன்றியிருக்கின்றன எனக் கருதலாம். மனித சரித்திரமே பத்தாயிரம் ஆண்டுகட்குட்பட்டுத்தான் தெரிகிறது. அதற்கு முன்னைய சரித்திரங்கள் எல்லாம் வெறும் ஊகங்களே.

இன்று உலகில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட திருந்திய மொழிகள் பேசப்படுகின்றன. திருந்தா மொழிகள் ஆயிரக் கணக்கில் உள்ளன. இலக்கிய வளம்மிக்க மொழிகள் நூற்றுக்கு மேற்பட்டுள்ளன. மூவாயிரம் ஆண்டுக்கால இலக்கிய வளம்மிக்க மொழிகள் பத்திருக்கின்றன.

சென்ற நூற்றாண்டில் மாக்ஸ்முல்லர், 1810இல் "The Science of Language" (மொழி விஞ்ஞானம்) எனும் நூலை இயற்றினார். பதினைந்தாம் நூற்றாண்டிலிருந்தே மேனாட்டறிஞர் மொழிகளைப் பற்றி ஆராய்ந்து, புதுக்கருத்துகளை வெளியிட்டனர். கால்டுவெல் போன்ற அறிஞர், மொழியியல் துறையில் அரிய கண்டுபிடிப்புகளைச் செய்து பல உண்மைகளை வெளிப்படுத்தியுள்ளனர்.

இன்று மொழி நூலார் உலக மொழிகளை ஆராய்ந்து முப்பெரும் பிரிவுகளாகப் பகுத்துள்ளனர். ஒரு மூலமொழியிலிருந்து காலங்கடந்தபிறகு பல்வேறு கிளை மொழிகள் உருவாகின்றன. வளர்ச்சி நிலையில் மொழிகள் திரிந்து புதுமொழிகளாக

மாறுகின்றன. இனங்காண இயலாதபடி ஒலிகள் திரிந்தும், நெகிழ்ந்தும், உறழ்ந்தும், பிறழ்ந்தும், நலிந்தும், மெலிந்தும் உருமாறுகின்றன. அயல்மொழிக் கலப்பாலும், மலை, காடுகள், பருவ காலங்களின் இடையீட்டாலும் மொழிகள் மாறுபடு கின்றன. கரடுமுரடான கற்கள், வெள்ளத்தால் அடிபட்டு, காலாந்தரத்தில் கூழாங்கற்களாக மென்மையுறுவதுபோல, சொற் களும் மெலிந்து புத்துருவோடு அழகும் இனிமையும் மென்மையும் அடைகின்றன. சமஸ்கிருதச் சொற்கள் பிராகிருதமாகத்திரியும் நிலையைக் கவனித்தால் இவ்வுண்மை புலப்படும்.

இவ்விதம் திரிந்த மொழிகளின் மூல உருவத்தையும் அறிஞர் கண்டறிய முயல்கின்றனர். தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு ஆகிய மொழிச் சொற்களிலிருந்து மூல திராவிட மொழியின் வேர்ச்சொற்களான தாதுக்கள், அதிலிருந்து பிறக்கும் சொற்கள், உடலுறுப்புகள், எண்கள், உறவுப் பெயர்கள், இன்றி யமையா வீட்டுப் பாண்டங்கள், கருவிகளின் பெயர்கள், இயற்கைப் பொருட்களின் பெயர்கள், முதலியவற்றின் அமைப்பினைக் கொண்டும், மொழியின் இலக்கண அமைப்பைக் கொண்டும் மொழி களின் உறவுகளை நிர்ணயித்து வகைப்படுத்தியுள்ளனர். இவ்வகை யில் பகுத்துள்ள மூன்று வகைகளும் அவற்றின் முக்கிய மொழி களும் காண்க :

I ஆரிய மொழிக் குடும்பம்

1. வேதமொழி—சமஸ்கிருதம்—பாலி, பிராகிருதம், அபபிரம்சம், வடஇந்திய மொழிகளான ஹிந்தி, வங்காளம், மராட்டி, குஜராத்தி—சிந்தி, ஒரியா, அசாமி முதலியன இந்திய நாட்டில் வழங்குபவை.
2. அர்மீனியன், வேல்ஸ், அயர்லாந்து முதலிய மொழிகளான கெல்டிக் குடும்பம்.
3. லத்தீன், இத்தாலி, பிரஞ்சு, போர்த்துகீஸ், ஸ்பானிஷ், ருமேனியமொழி, அல்பேனியா முதலியன இத்தாலிக் குடும்பம்.
4. டோரிக், அயோனியன், கிரேக்கமொழி முதலியன ஹெல்லோனிக் குடும்பம்,
5. லிதுவேனியா, பல்கேரியா, ருஷியா, ஸ்லாவேனியன், போலந்து முதலிய லாடிஸ்லாவானியக் குடும்பம்.
6. ஜெர்மனி, இங்கிலீஷ், ஹாலந்து, டென்மார்க், நார்வே, ஸ்வீடன் முதலிய ட்யூடானிக் குடும்பம்.
7. பார்சி, பஹலவீ முதலிய ஈரான்மொழிக் குடும்பம்.

இம்மொழிகளில் சமஸ்கிருத மொழியும், பிராகிருத பாலி மொழிகளும், கிரேக்கம், லத்தீன் மொழிகளும் மிகப் பழமையான இலக்கியங்களை உடையவை. பார்சி மொழி மூலமான ஜெண்ட் அவஸ்தா மொழியும் மிகப் பழமையான மொழியாகும்.

II செமிடிக் குடும்பம்

1. சமாரியன், சிரியன் கல்தீ முதலிய ஆரமேயிக் குடும்பம்.
2. ஹீப்ரு, கார்த்தீஜியன் முதலிய ஹைப்ரேயிக் குடும்பம்.
3. அரபி, அபிசீனியா முதலிய அராபிக் குடும்பம்.

III துரானியமொழிக் குடும்பம்

1. தாஜிக், யூராகியன் முதலிய சமோயதக் குடும்பம்.
2. துங்குஜுக், லாமூதி, சீனம் முதலிய துங்குஜிக் குடும்பம்.
3. மங்கோலியம், திபேத் முதலிய மங்கோலியக் குடும்பம்.
4. உஸ்பெக், துர்க்கி, கிர்கீஸ், ருமேலியன், சைபீரியன், அஜர்பெய்ஜான், கிரிமியன் முதலிய துருக்கிய குடும்பம்.
5. ஹங்கேரியன், பினிஷியன் முதலிய பினிக் குடும்பம்.
6. சீனம், லாவோஸ், மலாய், பூடான் முதலிய இமாலய மொழி கள்—பர்மா, நாகா, தங்கிக் குடும்பம்.
7. தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு, கோண்டு, பிராஹுயீ முதலிய திராவிடக் குடும்பம்.

ஆரிய மொழிக் குடும்பம், ஐரோப்பா, ஆசியாவின் மேற்பகுதி, இந்தியா ஆகிய நாடுகளில் பேசப்பட்டன. செமிடிக் எகிப்து முதலிய ஆப்ரிக்க கண்ட வடக்கு மேற்குப் பகுதிகளிலும், அரேபியா விலும் பேசப்பட்டன. துரானியக் குடும்பம், ருஷியாவின் கீழ்ப் பகுதி, சீனம், இந்தியாவின் தென்பகுதியிலும் பேசப்பட்டன.

ஒவ்வொரு மொழியும், பிற மொழிகளோடு தனக்குள்ள தொடர்பை அறியாமல் இருந்து வந்தன. ஆங்கிலேயர் உலக ஆட்சியைக் கைப்பற்றியதும், கிறிஸ்தவ மிஷனரியினர் உலகம் முழுதும் மதம் பரப்ப முயன்றதும் உலகில் புது விஞ்ஞானம் உருவானதும் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளத் துணை புரிந்தன. ஒருவரைப் புரிந்து கொள்ள முதலில் அவரது மொழியைப் புரிந்து கொள்ள வேண்டும். ஆதலின் கிறிஸ்தவ மிஷனரிகளைச் சார்ந்த அறிஞர் அந்தந்த நாட்டு மொழிகளைக் கற்றனர். அதன் விளைவாக மொழிகளின் உறவுகள் புலப்பட்டன.

மாக்ஸ்முல்லர்—சமஸ்கிருதம்—கிரீக், லத்தீன் மொழிகளின் உறவைத் தெளிவாக்கினார். ருக் வேதத்தைப் பதிப்பித்தும்,

மொழிபெயர்த்தும், கீழ்நாட்டு மறைஞான நூல்களை ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியிட்டும் உலகப் பண்பாட்டுறவுக்கு மிகப்பெருந்தொண்டு செய்தவர் மாக்ஸ்முல்லர். வடமொழியி லுள்ள தத்துவ, இலக்கிய நூல்களின் மாண்பினை உலகறியச் செய்த மகான் அவர். 'சிலர் வடமொழியைத் தற்கால அறிஞர் வேண்டுமென்றே உருவாக்கி, பொய்யாகப் பழைய மொழி என்று கூறுவதாக ஐயுற்றனர்' என்று மாக்ஸ்முல்லர் 'மொழி விஞ்ஞானம்' எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

ஐந்தாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட ருக் வேதத்தில் காணப் படும் வடமொழியும், மூவாயிரம் ஆண்டுக்கால இலக்கியவளம் உடைய கிரேக்கம், இரண்டாயிரம் ஆண்டுகால இலக்கிய வளம் உடைய லத்தீன் ஆகிய மூன்று மொழிகளும் ஒரே மொழியினின்றும் பிரிந்தவை என்று நிறுவினார்.

ஒரு காலத்தில் லீப்னிட்ஸ் என்னும் மேனாட்டுத் தத்துவஞானி [LEIBNIZ 1646-1716] ஹீப்ரு மொழி உலகின் மூலமொழி என்று கூறினார். சமஸ்கிருதம் உலகின் மூலமொழி என்றும் தமிழ் உலகின் மூலமொழி என்றும் கூறும் அறிஞர் உள்ளனர். இவை எல்லாம் தம் மொழி மீதுள்ள மிகுந்த பற்றினால் ஏற்பட்ட கருத்துகளே யன்றி அறிவியல் நோக்கில் அன்று. உலகின் மூல மொழியைப் பெயரிட்டழைக்க இயலாது; அதன் வடிவத்தை அறியவும் இயலாது. எனினும் அதனின்றும் கிளைத்த மொழிகளில் பழைய இலக்கியங்களை உடைய மொழிகள் மூலம் நாம் பலமொழிக் குடும்பங்கள் உள்ளன எனக் கண்டறிய முடியும். அந்த வகையில் ஆரிய மொழிக் குடும்பமே மிகத் தொன்மையும், இலக்கிய வளமும், மிகப் பெரும்பான்மை மக்களால் பேசப்படுவதாகவும் காணப் படுகிறது.

இந்த ஆரியமொழிக் குடும்பத்தினைச் சேர்ந்த சமஸ்கிருதம், பிராகிருதம், பாலி, கிரேக்கம், லத்தீன், ஜெர்மன், பிரஞ்சு, இத்தாலி, இங்கிலீஷ், பார்சி ஆகிய மொழிகளின் இலக்கிய வளமும், அறிவியல் சார்ந்த நூற்பரப்பும் உலகுணர்ந்தவை. துரானிய மொழிக் குடும்பத்தில் தமிழ், தெலுங்கு, கன்னடம், சீனம், திபேத்து ஆகியவை இலக்கிய வளமுடைய தொன்மை மொழிகள்.

செமிடிக் குடும்பத்தில், ஹீப்ரு, அரபி ஆகியன இலக்கிய வளமுடைய தொன்மை மொழிகள்.

இவற்றின் விரிவினை மொழி நூற்களில் காண்க.

# ஆரியமும் திராவிடமும்

இந்திய நாட்டில் இருபெரும் மொழிக் குடும்பங்கள் உள்ளன. ஒன்று ஆரியமொழிக் குடும்பம், மற்றொன்று திராவிடமொழிக் குடும்பம். இம்மொழிகளின் ஆய்வின் மூலமும், மானிடவியல் (Anthropology) ஆய்வுகள் மூலமும் இந்திய நாட்டில் இரு பேரினங்கள் இருந்தன என்பது தெளிவு. இவ்விரு இனங்களும் பத்தாயிரம் ஆண்டுகட்கு முன்னரே இந்நாட்டில் கலந்துறவாடியதன் விளைவாக இந்தியப் பண்பாடு உருவாயிற்று. பாலும் நீரும் போல இவ்விரு இனங்களும் கலந்து விட்டன. மொழிகளிலும் கலப்பு ஏற்பட்டது. ஆரியர் சிவந்த மேனியர். நீண்ட நாசியினர். திராவிடர் கருவண்ணத்தர். இவர்களது இனக் கலப்பின் விளைவினை இன்றும் கண்கூடாகக் காணலாம். தென்னக மக்கட் குழுக்கள், சாதி யினப்பிரிவுகள், எதுவும் தூய கருநிறம் என்றோ தூய செந்நிறம் என்றோ கூற இயலாத வகையில் சிவப்பும், கறுப்பும், இரண்டின் கலப்பான மாநிறமும் உள்ளவர்கள் காணப் படுவர். வடமாநில மக்களும் இந்த முந்நிறமும் உடையவர்களாக உள்ளனர். இது மிகப் பழங்காலத்திலேயே ஆரியரும் திராவிடரும் கலந்து ஒன்றிவிட்டனர் என்ற உண்மையைத் தெளிவுபடுத்தும் சான்றாகும்.

திராவிடரின் தொன்மையான நாகரிகம் மொஹஞ்சதரோ ஹரப்பா அகழ்வாராய்ச்சிகள் (Excavation) மூலம் புலப்படுகிறது. ஆரியரின் தொன்மையான நாகரிகமும் கங்கைச் சமவெளி நாகரிகத்தின் மூலமும் ருக்வேத கீதங்கள் மூலமும் புலப்படுகிறது.

திராவிடரின் ஐந்தாயிரம் ஆண்டுக்கு முற்பட்ட இலக்கியம் இன்று கிட்டவில்லை. ஆரியரின் ஐந்தாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட நாகரிகச் சின்னங்கள் கிட்டவில்லை. எனினும் இவ்

விரண்டும் தொன்மையான நாகரிகங்களே ஆம். இனங்கள் கலப்புறும்போது மொழிகளும் கலந்து விடுதல் இயல்பே. எனினும் பெரும்பான்மையினரின் வண்ணம், பெரும்பான்மையான அடிப் படை வேர்ச்சொற்களின் தன்மை, சொல்லமைப்பின் இயல்பு இவற்றின் மூலமாக இனங்களையும் மொழிகளையும் வேறு பிரித் தறிய முடியும். மொழி நூலறிஞரின் ஆய்வின் பயனாக ஆரியமும் திராவிடமும் தனித்தனி இன, மொழிக் குடும்பங்கள் என்பது இன்று தெளிவாக அறியப்பட்டுள்ளது.

ஆரியமொழி கடுமையும் பல ஒற்றுக்கள் இணைந்த சொல் லாக்கமும் உடையது. முன் ஒட்டுச் சொற்களை உடையது. திராவிடமோ மென்மையும், உயிர் எழுத்தொலிகள்மிக்கும் பின் ஒட்டுச் சொற்களையும் உடையது.

ஸ்த்ரீ=பெண், அக்ஷ=கண், ஆஸ்சர்ய=வியப்பு. இச்சொற் களில் தமிழ்ச் சொற்கள் மென்மையாக அமைதல் காணலாம். இலக்கண அமைப்பும் தனித் தன்மையதே. திராவிட மொழி களில் தெலுங்குச் சொற்கள் மென்மை, இனிமைகளுடன் உயிரீறாகவே முடியும் தனிச் சிறப்பும் கொண்டன.

ஆரிய மொழிகள் வடஇந்தியாவிலும் இலங்கையிலும் பேசப் படுகின்றன. இலங்கையிலுள்ள சிங்களம் ஆரியமொழிக் குடும்பத் தைச் சார்ந்ததாகும்.

தென்மொழிகள் தென் இந்தியாவிலும் இலங்கையிலும் (தமிழ்) பேசப்படுகின்றன. ஒரு சில திருந்தாத திராவிட மொழிகள் வட இந்தியாவில் ஒருசில மலைவாழ் மக்களிடமும் இனங்களிலும் பேசப் படுகின்றன. இஃது ஒரு காலத்தில் இந்தியா முழுதும் திராவிட மொழி பேசப்பட்டதைக் குறிக்கும் சான்றாக அறிஞர் கருதுவர்.

எந்த மொழியிலும் பிறமொழிச் சொற்கள் கலந்திருக்கும். அவை பெரும்பாலும் பெயர்ச் சொற்களாகவும், ஒரு பொருள் எந்த மொழிப் பகுதியிலிருந்து வந்ததோ அந்த மொழியோடு வழங்குவ தாகவும் அமையும். அந்தப் பொருளோடு சேர்ந்த வினைச் சொற் களும் விகுதிகள் சிதைந்தும் மருவியும் வழங்கப்படும். வடமொழி யின் தத்துவக் கருத்துகள் தமிழில் வருவதாலும் சமண, பவுத்த, வேத மதங்களின் செல்வாக்கு வடநாட்டிலிருந்து தென்னாடு போந்தமையாலும் தமிழில் பிராகிருத, பாலி, சமஸ்கிருதச் சொற்கள் மதம், தத்துவம் தொடர்பாக நிறைய கலந்து விட்டிருப் பதைக் காணலாம்.

இந்திய நாட்டில் இசுலாமியர் (மொகலாயர்) ஆண்ட காலத்தில் நிலவரித் தொடர்பான பார்சி, உருதுச் சொற்கள் தமிழில் மிகுதியும் கலந்தன. கிருஷ்ண தேவராயர், தஞ்சை, மதுரை நாயக்க மன்னர் காலத்தில் கலை தொடர்பான பல தெலுங்குச் சொற்கள் தமிழில் கலந்தன. ஆங்கிலேயர் ஆட்சியின் காரணமாகவும், மேனாட்டு அறிவியற் கருவிகள் புகுந்ததின் காரண மாகவும் ஆங்கிலச் சொற்கள் தமிழில் மிகுதியாகக் கலந்தன. இக் கலப்பினைத் தவிர்த்தல் இயலாது.

பிறமொழிச் சொற்கள் ஒரு மொழியிற் கலக்கும்போது உருமாறிச் சிதைந்து மென்மையான புதுவடிவம் பெறுவதும் உண்டு. திராவிட, பிராகிருதச் சொற்களின் இத்தகு மாற்றத்தைத் தெலுங்குமொழியில் மிகுதியாகக் காணமுடியும்.

நமக்குக் கிடைக்கும் இலக்கியங்கள், கல்வெட்டுக்கள் மூலமே பழமையான மொழிகளின் உருவத்தைக் காணமுடியும். உலகில் எழுத்துருவம் ஏற்பட்டதே ஐந்தாயிரம் ஆண்டுகட்கு உட்பட்டுத் தான். அதற்கு முன்னைய இலக்கியங்கள்கூட வேதத்தைப் போலவே எழுதாக் கிளவிகளாக செவிவழிக் கேட்ட கல்வி மூலமே அமைந்திருந்தன. ஆதலின் திராவிட மூல மொழியின் இலக்கி யத்தை உணரும் வாய்ப்பு இல்லை. சுமார் ஐயாயிரம், எட்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதெனக் கருதப்படும் வடமொழி இலக்கி யங்கள் நமக்குக் கிடைத்திருப்பது போல, அதே காலத்திய தென்னக இலக்கியங்கள் கிடைக்கவில்லை. தென்னகத்தில் சமண பவுத்த மதங்கள் புகுந்த பின்னரே, இரண்டாயிரத்தைநூறு ஆண்டுக்கால இலக்கிய வரலாறே தொன்மையான தமிழ் மொழியில் தொல்காப்பியம், சங்க இலக்கியம் மூலம் தெரிகிறது.

ஐந்தாயிரம் ஆண்டுகட்டு முன்னைய திராவிடமொழியின் உருவை இன்று மொழியியல் அறிஞர் ஊகித்தறிய முற்பட்டுள்ளனர். மூலதிராவிட மொழியின் அமைப்பினைத் தமிழ்மூலம் விளக்குவர் சிலர். தெலுங்கு மூலமாகவும், கன்னட மூலமாகவும் சிலர் விளக்குவர். தமிழில்தான் தொன்மையான இலக்கியங்கள் கிடைத் துள்ளன. கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டுக்குப் பின்னரே கன்னட, தெலுங்கு இலக்கியங்கள் கிடைத்திருப்பதால் கன்னட, தெலுங்கு நாடுகளில் வழங்கிய மூல திராவிட மொழியின் அமைப்பினை உணர வழியில்லை. சிலர், தமிழ் மொழியே அங்கிருந்த மொழி எனவும் மூல திராவிடமே தமிழ்தான் என்றும் மொழியார்வத்தின் காரணமாகக் கூறுவர். அஃது ஏற்புடையதன்று.

''வடவேங்கடம் தென்குமரி, ஆயிடைத் தமிழ்கூறு நல்லுல கினையே'' நாம் தமிழ் எனப் பெயரிட்டழைக்கிறோம். கோதாவரி, துங்கபத்திரைக் கரைகளில் வாழ்ந்த மக்கள் பேசிய மொழியைத் தமிழ் என்று கூறமுடியாது. ஏனெனில், தமிழில் இல்லாத பல மூல திராவிடச் சொற் கூறுகள் கன்னடம், தெலுங்கு மொழிகளில் கிடைக்கின்றன. ககரத்திலிருந்துதான் சகரச் சொற்கள் உருவாகும் என்பது ஒரு மொழியியல் விதி. அந்த அடிப்படையில் பார்த்தால் கீழே காணும் சொற்கள் மூலம் உண்மை விளங்கும்.

| தமிழ் | கன்னடம் | தெலுங்கு |
|---|---|---|
| செவி | கிவி | செவ்வி |
| செய் | கெய் | சேயு |
| கிளி | கிளி | சிலுக |
| கை | கெய் | கேலு/சேயுலு |
| எலி | இலி | எலுக |
| அலை | அலெ | அல |
| தலை | தலெ | தல |

இச்சொற்களில் மூலத் திராவிட உருவம் எது?

கிவி எனும் கன்னடம் மூல உருவமா?

செவி எனும் தமிழ், தெலுங்கு மூல உருவமா?

தமிழ்ச் சொல் செவியே மூல உருவம் எனத் தமிழர் கூறுவர் சகரமே மூல உருவம். அது ககரமாயிற்று என்பர். இனி கிளி என்பது மூல உருவமா சிலுக என்பது மூல உருவமா? சகரமே ககரமாகும் என்றால் சிலுக என்பது மூல உருவமாக வேண்டும். இங்குக் ககரமே சகரமாயிற்று எனத் தமிழர் கூறுவர். அப்படி யானால் கிவி என்ற கன்னட உருவமே செவி ஆயிற்று. ககரமே சகரமாகும் என்பதே விதி என்றால் அதை ஏற்கத் தயங்குவர். அதே போலஅல, தல மூல உருவமா? மலையாளத்திலும் அல, தல என்பதே உருவமாகும். ஆதலின் அல, தல என்பவைதான் மூல உருவம். அலை, தலை அன்று என்பர் சிலர். சிலர் அலை, தலை தான் அல, தல ஆயிற்று என்பர். நீட்டல், குறுக்கல், வலித்தல், மெலித்தல், ஒற்று நீங்கல் முதலிய பல விகாரங்களை யுடைய இச்சொற்களின் மூல உருவங்கள் சில தமிழில் கிடைக் கின்றன. சில தெலுங்கில் கிடைக்கின்றன. சில கன்னடத்தில் கிடைக்கின்றன. ஆதலின் திராவிட மொழிகளில் புலமையுடையார்

மூல திராவிட மொழி ஒன்றினை ஏற்று அதனின்றும் கிளைத்த மொழிகளே தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்று தீர்மானமாகக் கூறுவர். இதுவே ஏற்புடைய கருத்தாகும்.

இத்திராவிட மொழிகளில் பழமையான இலக்கியம் உடைய உயர் தனிச் செம்மொழியாகிய தமிழ், வடசொற்களின் ஆதர வின்றியும் இயங்கும் தனித் தன்மையது. பிற திராவிட இலக்கிய மொழிகளான தெலுங்கு, கன்னடம், மலையாளம் வடமொழிச் சொற்களின் ஆதரவின்றி இயங்க இயலாது.

மூல திராவிடமொழி இந்தியா முழுதும் பேசப்பட்ட மிகமிகத் தொன்மையான மொழி. அம்மொழியில் இலக்கியங்கள் இருந்த தாகவோ, எழுத்துமுறை அமைந்திருந்ததாகவோ கூற யாதொரு சான்றும் இல்லை. சரித்திர காலத்துக்கும் அப்பாற்பட்ட மிகப் பழமையான காலத்தில் பேசப்பட்டது. அம்மூலத் திராவிடமொழி' இட வேறுபாட்டாலும் இனக் கலப்பாலும், இயற்கை மாற்றங் களாலும் மிகமிகத் திரிந்து இன்று காணும் திராவிட மொழிகளாக உருவாகின. திராவிட மொழிகள் தனித்தனி உருவங்களைப் பெற்ற பிறகு எத்தனையோ சொற்கள் அம்மொழிக்கே உரியனவாக அமைந்தன. ஆதலின் தமிழில் உள்ள சொற்களில் வடசொற் களைத் தவிர்த்த எல்லாத் தமிழ்ச் சொற்களும் மூல திராவிடச் சொற்கள் அன்று. பல திராவிடச் சொற்கள். பல தமிழ்ச் சொற்கள். இது போலவே தெலுங்குச் சொற்களிலும் பல திராவிடச் சொற்கள். பல தெலுங்குக்கே உரிய சொற்கள். இதனை நம் முன்னைய இலக்கண நூலாசிரியர்கள் குறிப்பாக உணர்த்தியுள்ளனர்.

தமிழில் உள்ள சொற்களில் வடசொல் நீங்கிய பிறவற்றை ஆய்ந்து இது திராவிடச் சொல், இது தமிழ்ச் சொல் என்று தெளிவாக இனங்காண ஆய்வுகள் செய்தல் வேண்டும். ஒரு தமிழ்ச் சொல், பிற திராவிட மொழிகள் எதிலும் இல்லாவிட்டால் அது தமிழ்ச் சொல் ஆகும். அச்சொல் பிற திராவிட மொழிகளாகிய தெலுங்கு, கன்னடம், துளு ஆகியவற்றில் இருந்தால் அது திராவிடச் சொல் என்று முடிவு கட்டலாம். உதாரணமாக நீர் என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். அதற்குச் சூடாமணி நிகண்டு கீழ்க்கண்ட பலசொற்களை ஒரே பொருளுடையனவாகக் கூறியுள்ளது.

வாரி, நீரம், சிந்து, புனல், சலிலம், பயம், மாரி, கார், அறல், நாரம், அம்பு, உதகம், வனம், வார், மழை.

இச்சொற்களில் வாரி, சிந்து, சலிலம், பயம், நாரம், அம்பு, உதகம், வனம் என்பன வடமொழிச் சொற்கள்.

நீரம், நீர் என்பன வடமொழியில் வழங்கினும் திராவிட மொழிச் சொற்கள்.

புனல், மாரி, கார், வார், மழை, அறல் என்பன தமிழ்ச் சொற்கள்.

பொனல் என்பது வெள்ளப்பெருக்கு, நதி என்ற பொருளிலும், மழை என்பது வானின்றும் பொழியும் மழைக்கும் கன்னடத்தில் வழங்கப்பெறுகிறது. கார் - கருவண்ணம் எனும் பொருளில் தெலுங்கு முதலிய மொழிகளில் வழங்கப்பெறும்.

ஆதலின் நீர் என்பது திராவிடச் சொல்லாகவும் புனல் என்பது தமிழ்ச் சொல்லாகவும் கருதப்படும். இதுபோன்றே பூ - மலர், அலர், போது, தார், இணர், துணர் போன்ற மலரைக் குறிக்கும் சொற்களில் பூ, அலர் என்பன திராவிடச் சொல்லாகவும் மலர், போது, தார், இணர், துணர் தமிழ்ச் சொல்லாகவும் கருதப் படும். மீன் திராவிடச் சொல்லாகவும் கயல் தமிழ்ச் சொல் லாகவும் அமையும். செவி, கிவி திராவிடச் சொல்லாகவும் காது தமிழ்ச் சொல்லாகவும் அமையும். என்றூழ் (எண்ட) திராவிடச் சொல்லாகவும் வெயில் தமிழ்ச் சொல்லாகவும் அமையும். இவ்விதம் திராவிடச் சொல், தமிழ்ச் சொல் தனியகராதிகள் தொகுக்கப்படவேண்டும்.

திராவிடமொழிச் சொற்களும் ஆரிய மொழிச் சொற்களும் முற்றிலும் தனித் தன்மையுடையன என்பதில் ஐயமில்லை. ஏதோ ஒரு சில சொற்களின் ஒப்புமை கொண்டு ஒன்றிலிருந்து ஒன்று வந்த தாகவோ, கடன் பட்டதாகவோ கூறுவது தவறாகும்.

ஆரியமொழிகள் ஆகிய கிரேக்கம், லத்தீன், சமஸ்கிருதம் ஆகிய வற்றின் சொற்களை ஆய்ந்து ஒரே மூல ஆரிய மொழியினின்றும் கிளைத்தனவே என்பது தெளிவாக மொழி வல்லுநர்களால் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. ஆதலினால்தான் ஆரியரும்

ஐரோப்பாவிலிருந்து குடிபெயர்ந்து இந்தியா போந்தனர் என்ற கருத்து உருவாகி ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. ருக்வேத காலத்துக்கு முன்னைய காலத்தில் இந்த ஆரியர் இந்தியா வந்தனர் என்பது ருக்வேதப் பாடல்கள் மூலமும் விளங்குவதாகக் கூறுவர்.

தற்போது திராவிடமொழிகட்கும், ஆரிய மொழிகட்கும் எழுத்துமுறை—அரிச்சுவடி (Alphabet)—ஒன்றாகவே உள்ளதற்குக் காரணம் இவ்வெழுத்துமுறை இந்தியா வந்தபின்னர் ஆரிய—திராவிடக் கலப்பிற்குப் பின்னர் தோன்றியதேயாகும். இஃது ஆரியரிடமிருந்து திராவிடர்க்கு வந்ததா? திராவிடரிடமிருந்து ஆரியர் பெற்றனரா? என்று வரையறுத்துக் கூற இயலாது. எத்தகைய சான்றுகளும் இல்லை. இலக்கியச் சான்றுகளில் நம் எழுத்து முறை ஐந்தாயிரம் ஆண்டுகட்கு முன்னரே ருக்வேத காலத்திலேயே தோன்றியுள்ளதாகக் கருதப்படுகிறது. மொஹஞ்ச தாரோ—ஹரப்பா அகழ்வுகளில் கிடைத்த சின்னங்களிலுள்ள எழுத்துக்கள் தெளிவாக அறிய முடியவில்லை. அசோகரது கல்வெட்டு எழுத்துக்களே நாம் காணும் தொன்மையான எழுத்துக்கள். அதனைப் பிராம்மி என்பர். அது பிராகிருத—பாலிமொழிகளில் அமைந்துள்ளது. இவ்வெழுத்து முறையே இன்றைய எல்லா இந்திய எழுத்துக்கட்கும் மூலமாகும். தமிழகத்தின் தொன்மையான கல்வெட்டுக்கள் பிராம்மியில்தான் கிடைத்தன. இக் கல்வெட்டுகளில் பிராகிருத சொற்கள் மிகக் கலந்துள்ளன.

திராவிடமொழிகளின் சொற்கள்—ஒலிக்கும் எழுத்து முறைக்கும் உள்ள வேறுபாடுகளைச் சிறிது காண்போம். தமிழில் உள்ள உயிரெழுத்துக்கள் பிற திராவிடமொழிகட்கும் உள்ளன. ஆனால் மெய்யெழுத்துக்களில் தமிழில் வல்லினம், மெல்லினம், இடையினம் ஆகிய கசடதபற, ஙஞணநமன, யரலவழள ஆகிய பதினெட்டு எழுத்துக்கள் போதுமானதாக உள்ளன. க என்ற வல்லினம் இடத்திற்கேற்ப ஹ என்றும் க' (Ga) என்றும் ஒலிக்கும். கடல், தங்கம், பாகன், எனும் மூன்று இடங்களில் வரும் 'க' கரம் மூன்று ஒலிகளைக் கொண்டுள்ளது. இதனால் பிறமொழியினர் தமிழ் மரபுணர்ந்து ஒலிக்க இடர்ப்படுவர். தெலுங்கில் இந்த இடர்ப்பாடில்லை. ஒலிக்கேற்ப எழுத்துக்கள் உள்ளன. மேலும் தெலுங்குச் சொற்கள் முதனிலையில் க', ஐ, ட', த', ப' என்னும் சரளங்களைக் கொண்டியங்குகிறது.

| தமிழ் | தெலுங்கு | பொருள் |
|---|---|---|
| கால் (Kaal) | கா'லி (Gaali) | காற்று |
| கால் (Kaal) | கா'லு (Kalu) | பாதம் |
| கழை (Kalai) | க'ட (Gada) | மூங்கில் |
| கண் (Kan) | கன்னு (Kannu) | கண் |
| சின்ன (Sinna) | சின்ன (Chinna) | சிறிய |
| செய் (Sey) | சேயு (Cheyu) | செய் |
| திகில் (Thikil) | தி'கு'லு (Dhigulu) | திகிலுறல் |

தெலுங்கு மொழி திராவிடமொழிகளில் தனித்து சரள ஒலிகளும், உயிரீறும் உடையதாகவும் அதற்கேற்ற எழுத்துக்கள் உடையதாகவும் உள்ளது. தெலுங்கில் முப்பத்தாறு எழுத்துக்களும், தமிழில் முப்பது எழுத்துக்களும் உள்ளன. எனினும் தற்போதைய தெலுங்கு வடமொழிக்குரிய எழுத்துக்களோடு கலந்து ஐம்பத்திரண்டு எழுத்துக்களோடு இயங்குகிறது.

ஆரியமொழிச் சொற்கும் திராவிட மொழிச்சொற்கும் மிகுந்த வேறுபாடுகள் உள்ளன. எனினும் சிற்சில சொற்களின் முதலெழுத்துக்களில் ஒருமைப்பாடு இருக்கிறது. ஒருவேளை இவை ஒரே மூல மொழியிலிருந்து கிடைத்ததன் அடையாளங்கள் ஆகலாம். இதனைக் கொண்டு ஒன்றிலிருந்து ஒன்று உண்டானதாகக் கருதுவது பிழையாகும். சில சொற்களின் தன்மைகள் காண்பாம்.

| தமிழ் | சமஸ்க்ருதம் |
|---|---|
| கண் | அக்ஷ : |
| செவி | கர்ண : |
| உடல் | சரீர : |
| பல் | தந்த : |
| கால் | பாத : |
| மரம் | வ்ருக்ஷ |
| தலை | சிர : |

இச்சொற்களின் வேறுபாடு நன்குணர முடியும். ஒரு மொழியின் இன்றியமையாச் சொற்கள் உடலுறுப்புகளைக் குறிக்கும் சொற்கள் ஆகும். தமிழிலும் திராவிட மொழிகளிலும் உள்ள இச்சொற்களின் தனித் தன்மையே திராவிடமொழிகள் தனி, ஆரிய மொழிகள் தனி என்பதனைத் தெளிவாக்கும்.

| தமிழ் | சமஸ்க்ருதம் |
|---|---|
| கை | கர |

என்று சொல் ஒலி ஒற்றுமையுடையதாக உள்ளது. க்ரு என்ற சொல் செய் என்ற தாதுவினை உடையது. க்ருவிலிருந்து கர ஆயிற்று. தமிழில் செய் என்பது மூல தாது. அதன் திராவிட மூல தாது கெய் என்பதாகும். அது கன்னடத்தில் வழங்குகிறது. கெய் என்பதிலிருந்து கை வந்தது. கெய் எனும் சொல் செய் எனத் திரிந்தது. செய் என்ற பகுதியினடியாகச் சேயு (செய்க) என்ற தெலுங்கு வினைச்சொல் உருவாகிறது. அதிலிருந்து சேயி (கை) என்ற பெயர்ச்சொல் உருவாகியது. செய் என்ற தமிழ் வேர்ச் சொல், கெய் என்ற திராவிட வேர்ச்சொல், க்ரு என்ற சமஸ்கிருத தாது ஒலி ஒப்புமை யுடையது. எனினும் அத் திராவிட வேர்ச் சொற்கும் ஆரிய வேர்ச் சொற்கும் தொடர்பில்லை. க்ரு என்ற தாதுவின் மூலம் "டுக்ருஞ்" என்பதாகும். "டுக்ருஞ்கரணே" என்பது பாணினீய தாது பாடம். "டுக்ருஞ்" என்ற ஆரிய வேர்ச் சொல் சமஸ்கிருதத்தில் 'க்ரு' மட்டும் ஏற்கும். முதல் எழுத்தாகிய 'டு' என்பது பிற ஆரிய மொழிகளான கிரேக்கம், லத்தீன், ஆங்கிலம் ஆகிய வற்றில் வழங்கும். 'Do' என்ற ஆங்கிலச் சொல் 'செய்' என்ற பொருள்படும்.

இதுபோலவே மூல வேர்ச்சொல், இரண்டாகப் பிளவுற்று இருவேறு மொழிகளில் வழங்குதல் திராவிட மொழிகளிலும் உண்டு. உதாரணமாக "வரு" என்பது 'வா' என்ற பொருளில் உள்ள மூல திராவிட வேர்ச்சொல். மலையாளத்தில் இன்றும் 'வரு' என்ற சொல்லே பயன்படுகிறது. இந்த 'வரு' நீட்டல் விகாரமுற்று. தமிழில் 'வா' என்றும் தெலுங்கில் 'ரா' என்றும் பிளவுபட்டு இயங்குகிறது.

*நன்னூலார் கூறுவது போல, ஈறு போதல், ஆதி நீடல், வலித்தல், மெலித்தல் விகாரங்களும் எல்லா மொழிகட்கும் இயல்பான திரிபுகளாகும்.

---

* ஈறு போதல் இடையுகரமிய்யாதல்
ஆதிநீடல் அடியகரமையாதல்
தன்னொற் றிரட்டல் முன்னின்ற மெய்திரிதல்
இனமிகல் இனையவும் பண்பிற்கியல்பே —நன்னூல் 136

தோன்றல் திரிதல் கெடுதல் விகாரம்
மூன்றும் மொழி மூவிடத்தும் ஆகும் —நன்னூல் 154

இதுகாறும் கூறியவற்றால், ஆரிய மொழிகள் தனி என்பதும் திராவிட மொழிகள் தனி என்பதும், மொழிகளில் திரிபுகள், மரூஉக்கள் இயல்பென்பதும் தெளிவு. இதனைப் புரிந்து கொண்டால்தான், சமஸ்கிருதம், பிராகிருத மொழிகளின் தன்மையைப் புரிந்து கொள்ள முடியும். சமஸ்கிருதம் எப்படிப் பிராகிருதமாகத் திரிகிறது என்பதை உணர முடியும். மேலும் ஆரிய மொழியான சமஸ்கிருதம், திராவிடமொழியின் தாக்கத்தால்தான் பிராகிருதமாகத் திரிந்தது என்ற உண்மையும் உணரமுடியும்.

நன்னூல் வடமொழியாக்கம் கூறும் 146 முதல் 150 வரையிலான சூத்திரங்கள் கூறும் விதிகளும் பிராகிருதத்துக்கும் பொருந்துகிறது.

# பிராகிருத மொழியின் தோற்றம்

மிகப் பழமையான, சரித்திர காலத்துக்கு முன்பே ஐரோப்பா மேல் ருஷியாப் பகுதிகளில் வாழ்ந்த ஆரிய இனம் பேசிய ஒரு மொழிக்கு இந்தோ—யூரோபியன் மொழி எனப் பெயரிடப் பட்டுள்ளது. இந்த இனம் இந்தியாவில் பத்தாயிரம் ஆண்டுகட்கு முன்பு புகுந்து கங்கை, சிந்து நதிப்புறங்களில் வசித்தனர். அவர்கள் பேசியமொழி ருக்வேதத்தில் காணப்படும் வேதமொழியாகும். இவ்வேத மொழிக்கும் ஈரானில் (பாரசீகத்தில்) வழங்கிய ஜொராஸ்டரின் 'ஜெண்ட் அவஸ்தா' மொழிக்கும் நெருங்கிய தொடர்புண்டு. இந்தப் பழமையான வேதமொழி இலக்கியங்களே ருக், யஜுர், சாம, அதர்வண வேதங்களாகும். இந்த வேத மொழியை, இந்தியாவில் வாழ்ந்த தொல்குடி மக்களாகிய திராவிடர், நாகர் முதலிய பழங்குடியினர், ஆரிய—திராவிட இனக் கலப்பு ஏற்பட்ட காரணத்தாலும் சமூக நிலைமைகளாலும் தாமும் பேசவேண்டிய கட்டாயத்திற்குள்ளாயினர். அதனால் இனக் கலப்பால் மொழிக் கலப்பும் ஏற்பட்டது. ஓராயிரம் ஆண்டுக் காலத்தில் எந்த மொழியும் மாற்றமடைந்து விடுதல் இயல்பு. வேதமொழியும் மாற்றமடைந்தது.

வாளும் வேலும் மட்டுமே போர்க்கருவியாகக் கொண்டிருந்த திராவிடரை, தொலைதூரம் சென்று தாக்கும் வில்லோடு வந்த ஆரியர் எளிதில் வென்று, தாம் மேன்மக்களாகவும் ஆயினர். எனினும் திராவிடரோடு இரண்டறக் கலப்பதைத் தவிர்க்க இயலவில்லை.

ஒரு இனம் பிறிதொன்றிடம் கீழ்ப்படிவதற்குப் போர்க் கருவிகளும், பொருளாதார வளமும்தான் முக்கிய காரணங்களாகும். ஆயுத பலமும், பொருட்குவிப்பும் உள்ள இனம், அதில்லாத இனத்தைக் கீழ்ப்படுத்தி விடும். உடல் வலிமை, மனவீரம், தன்னம்பிக்கை எல்லாம் ஆயுத வலிமைக்கு முன் நிற்க முடியாதல்லவா? இன்னும் அணு ஆயுத நாடுகட்குக் கீழடங்கிப் பிற நாடுகள் வாழும் சூழ்நிலையைக் காண்கின்றோம் அல்லவா?

ஆரிய, திராவிடக் கலப்பின் விளைவாக, வேதமொழியில் திரிபுகள் ஏற்பட்டு, மக்கள் பேசும் மொழி வேறாகவும், வேதம் ஓதி வந்த பிராமணரின் பண்டிதமொழி வேறாகவும் ஆகிவிட்டது. வேதமொழியைப் பாதுகாக்கவும், பொருள் புரிந்து கொள்ளவும், சான்றோரால் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. சிட்சை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், கல்பம், சோதிடம் ஆகிய வேதாங்கங்கள் எழுந்தன.

இக்காலத்தில் பாணினி வியாகரணச் (இலக்கணச்) சூத்திரங்கள் இயற்றினார். இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பு மக்கள் பேசிய மொழியினின்றும் பிரித்தறிய செம்மைப்படுத்திய வேத மொழிக்குச் 'சமஸ்கிருதம்' என்று பெயரிட்டனர். மொழியில் பிரிவுகள் ஏற்பட்ட நெடுங்காலத்துக்குப் பின்னர்தான் இப்பெயர்கள் சூட்டப்பட்டன. தமிழ், தெலுக்கு, கன்னட மொழிகட்கு மூலமான ஒரு மொழிக்கு, 'திராவிடம்' என்று பெயர் சூட்டியதே இரு நூற்றாண்டுக்குட்பட்டுத்தான் என்பதும் கவனிக்க வேண்டும். அதுபோலவே, சம்ஸ்கிருதம், பிராகிருதம் என்ற பெயர் சூட்டல்கள் இரண்டாயிரம் ஆண்டுகட்குள்தான். ஆனால் அம்மொழிகள் பிரிந்தமைந்ததோ மூவாயிரம் ஆண்டுகட்டு முன்னரே என்பதை மறந்துவிட வேண்டாம்.

வேதமொழியின் நேர்வழியான தூயமொழி சமஸ்கிருதமே. தொன்மையான இலக்கியங்கள் உடையதுவும் அதுவே. அந்த சமஸ்கிருதமே பிராகிருதமொழியாக உருமாற்றம் அடைந்தது. திராவிட மொழியின் நேர்வழியான தூயமொழி தமிழ். தொன்மை இலக்கியங்கள் உடையதுவும் அதுவே. தமிழே மலையாளமாகவும் திரிந்தது. எனினும் தெலுங்கு கன்னடம் மூல திராவிடமொழியினின்றும் தோன்றின. அதுபோன்றே பிராகிருதம் மூலவேத மொழியினின்றும் பிரிந்தது என்றும், சமஸ்கிருதத்திலிருந்து வந்தது என்றும் இருகொள்கைகள் உள்ளன. மிகத் தொன்மையான கால

நிகழ்ச்சிகளை இன்று ஊகித்தறிவது எளிதன்று. ஒருசில சான்று களைக் கொண்டு நிர்ணயிக்கவும் முடியாது. ஏனெனில் இரண்டு கொள்கைகட்குமே சான்றுகள் கிடைக்கின்றன. மேலும் இவ்விரு கொள்கைகட்கும் வேறுபாடு அதிகமில்லை. ஒரு பெண்ணின் சாயலை உடைய ஒரு பெண், தங்கையா? மகளா? என்று சாயலை வைத்து முடிவு கட்ட முடியாது. உறவுகளைப் பற்றிய தெளிந்த ஞானமுடையவர் கூற்றினால் தான் முடிவு தெரியும். அது போலத்தான் சாயலை வைத்துக் கூறாமல், வேறு சான்றுகளைக் கண்டறிய வேண்டும். இன்று பெரும்பாலும் மொழியறிஞர் சாயலை வைத்துத் தம் கருத்தை விளக்குவதால் தான் முரண்பாடான கொள்கைகள் எழுகின்றன. வேத மொழி மக்கள் மொழியாகத் திரிந்தது பிராகிருதம், அறிஞர் மொழியாக அமைந்தது சமஸ்கிருதம் என்பது பொதுவாக எல்லாராலும் ஏற்கப்பட்ட கருத்து. இந்த மக்கள் மொழியாகிய பிராகிருதத் துக்கும் பல நிலைகள் உண்டு. கி. மு. ஆயிரம் ஆண்டிலிருந்து கி. மு. முதல் நூற்றாண்டு வரை இருந்த பிராகிருத மொழிக்குப் 'பாலி' என்று பெயர். இது புத்தர் கால மொழி. புத்தர் பேசிய மொழியாகத் 'திரிபிடகம்' எனும் பௌத்த மத நூல்கள் தொகுக்கப் பட்டன. அசோகரது காலத்தில் 'திரி பிடகங்கள்' முறைப்படுத்தப் பட்டன. அந்த மொழி பிராகிருதத்தின் ஒரு வகையே. பௌத்தர் அதனைப் 'பாலி' என்று அழைத்தனர். பாலி என்பது பள்ளிகளில் பேசும் மொழி என்றும், புத்தரின் மொழி என்றும் பொருள் கொள்ளப்பட்டது. இந்தப் பாலி மொழி இலக்கியங்கள் அனைத்தும் 'திரிபிடகங்கள்' மற்றும் மிலிந்த பண்ஹா போன்றன முதல் நூற்றாண்டுக்கு முற்பட்ட பௌத்த நூல்களாகும். புத்தர் காலத்திற்குச் சிறிது முன்பு மகாவீரரும் இருந்தார். அவர் பேசிய மொழியும் பிராகிருதமே. அந்த மொழிக்கு 'அர்த்த மாகதி' என்று பெயரிட்டனர். மகாவீரர் பேசிய நேரிடையான இலக்கியங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. ஆதலின் 'பாலி' மொழிக்கும் 'அர்த்த மாகதி'க்கும் உள்ள வேறுபாடுகள், ஒற்றுமை கள் காண இயலவில்லை. பிராந்திய (வட்டார) மொழி வேறு பாடேயன்றி வேறன்று.

பாலி மொழியினை ஆராய்ந்தால் அதற்கும் சமஸ்கிருதத்துக்கும் உள்ள தொடர்பு தெளிவாகிறது. சமஸ்கிருதத்தின் சிதைவுதான் பாலி என்று புரிகிறது. ஒரு சில பாலிச் சொற்கள் மூலவேத மொழியோடும் தொடர்புள்ளதாக இருப்பதால் மூலவேத

மொழியின் திரிபு என்கின்றனர். எனினும் சமஸ்கிருத உபசர்க்கங் களையும் அதன் திரிபுகளையும் பாலி அப்படியே ஏற்றுக் கொண் டிருப்பதால் சமஸ்கிருதமே பாலியாகத் திரிந்தது என்று கூறினும் தவறில்லைதான்.

'பாலி' மொழி பிராகிருதத்தின் ஒரு முன் வடிவம். பாலி 'இலக்கியங்கள்' 'திரிபிடகம்' இலங்கையில் பாதுகாக்கப்பட்டது. இந்தியாவில் பௌத்தம் மறைந்து கீழ் நாடுகளிலும் திபேத்து முதலியவற்றிலும் பரவியது. அத்துடன் பாலி திரிபிடக இலக்கியம் உலகம் முழுவதும் பரவியது. இந்தியாவில் மகாயான பௌத்தம் 'பாலி'யை விடுத்து மீண்டும் சமஸ்கிருதத்திலேயே தன் தத்துவச் சிந்தனைகளைப் பதித்துக் கொண்டது. நாகார்ஜுனரின் மகாயான நூல்கள், சமஸ்கிருதத்தில் அமைந்தன. அவருக்குப் பின்வந்த வசுபந்து, அசகர் முதலியவர் சமஸ்கிருதத்தில் நூல்கள் இயற்றினர். நாலந்தா பல்கலைக்கழகத்தில் பாலி, சமஸ்கிருதம் இரண்டுமே கற்பிக்கப்பட்டன.

இந்தியாவில் 'பாலி' இலக்கியங்களைப் பத்து, பதினொன்றாம் நூற்றாண்டுகள் வரையும் பாதுகாத்தனர். புத்த கோஷர் (ஐந்தாம் நூற்றாண்டு) அட்டகதா எனும் விரிவுரைகளைப் பாலியில்தான் படைத்தளித்தார். பாலி மக்கள் மொழியாக இருந்து 'பிராகிருதம்' என்ற தனிப்பெயர் பெற்ற காலத்தும், அபப்பிரம்சம் என்ற தனிப்பெயர் பெற்ற காலத்தும் கூட 'பாலி பௌத்த பிட்சுக்களால் பாதுகாக்கப்பட்டு வந்தது. புத்த விஹாரங்களில் 'பாலி' இலக்கியப் பயிற்சி நடைபெற்று வந்தது. 'பாலி' இலக்கிய வரலாறு தனி நூலாக எழுதப்பட வேண்டிய தாகும். ஆதலின் அது குறித்து இங்கு விரிவாகக் குறிப்பிட வில்லை. 'பாலி' மொழி நிலையிலிருந்த பிராகிருதமே—மேலும் மேலும் திரிந்து கி. பி. முதல் நூற்றாண்டிலிருந்து ஏழு, எட்டாம் நூற்றாண்டுக் கால அளவில் 'பிராகிருதம்' என்று கூறும் நிலையை அடைந்தது. இந்தப் பிராகிருத மொழியின் இலக்கியங்கள் மிகச் சிறந்தவை. இந்தப் பிராகிருதமும் மேலும் மேலும் திரிந்து, "அபப்பிரம்சம்" என்னும் நிலையை அடைந்தது. 'அபப்பிரம்சம்' என்றால் 'கீழான வீழ்ச்சியுறுதல்' என்று பொருள். மொழியின் தூயநிலை வீழ்ச்சியுறுவதைச் சுட்டுகிறது. "அபப்பிரம்ச" இலக்கியங்களும் இன்றுள்ளன. இந்த அபப்பிரம்சம் பத்தாம் நூற்றாண்டிலிருந்து பதினைந்தாம் நூற்றாண்டுக்குட்பட்ட பிரா கிருத மொழியின் நிலையாகும்.

இந்த அபப்பிரம்சமே, முஸ்லீம் படையெடுப்புகள், முகலாயர்கள் ஆட்சிக் காலங்களின் இனக் கலப்புகளால் பண்பாட்டுக் கலப்புகளால் மேலும் மேலும் திரிந்து இன்றைய மராட்டி, குஜராத்தி, சிந்தி, காஷ்மீரி, பஞ்சாபி, இந்தி, உருது, வங்காளம், அஸ்ஸாமி, ஓரியா ஆகிய மொழிகளாக உருப்பெற்றுள்ளது.

ஒரு மொழியினருடன் பிற இனத்தார் கலப்பதால் அம்மொழியில் திரிபுகள், புதுச்சொற்கள், பிறமொழிச் சொற்கள் ஏற்படுகின்றன. இயற்கை மாற்றங்களாலும், தொடர்புகள் ஏற்படுவதிலுள்ள குறைபாடுகளாலும் அம்மொழி திரிகிறது. திரிந்த அம்மொழியும் அதேநிலை அடைகிறது. திரிந்து விட்ட மொழிகளின் ஒப்புமை கொண்டு, ஒன்றிலிருந்து ஒன்று பிரிந்ததாகக் கருதுவது இயலாது. தமிழ் மொழி வடவேங்கடம், குமரி, குண, குட கடல்கள் எல்லையாக இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு வழங்கியது. அம்மொழி மலையாளமாகத் திரிந்தது.

தமிழை விட அதிகமான மக்கள் பேசும் மொழி தெலுங்கு. அது மூல திராவிடத்தினின்றே திரிந்தது என்பர். அது போல வேத மொழியிலிருந்து சமஸ்கிருதம், பிராகிருதம், பாலி உருவாயின. பிராகிருதத்திலிருந்து தற்போதைய வட இந்திய மொழிகள் இவ்விதமாக உருவாயின. இம்மொழிகளின் கால வேறுபாடே திரிபுக்கு மூல காரணம்.




சமஸ்கிருதச் சொற்கள் பாலி, பிராகிருதமாகத் திரியும் சில விதிகள் காண்க.

வடமொழியில் உள்ள ரு, லு, ஐ,ஔ-எனும் எழுத்துக்கள் பாலி பிராகிருதத்தில் இல்லை.

| சமஸ்கிருதம் | பாலி-சபிராகிருதம் | பொருள் |
|---|---|---|
| ருணம் | இணம் | கடன் |
| ருஜு | உஜு | உண்மை |
| வைரம் | வேரம் | பகை |

குறில் நெடிலாதல்

| | | |
|---|---|---|
| வல்கலம் | வாகம் | மரஉரி |
| ப்ரகடம் | பாகடம் | வெளிப்பாடு |
| விம்சதி | வீசதி | இருபது |

நெடில் குறிலாதல்

| | | |
|---|---|---|
| சூர்ண | சுண்ணோ | சுண்ணம் |
| ஜீர்ண | ஜிண்ணோ | சீரணம் |

ரகரம் கெடுதல்

| | | |
|---|---|---|
| கர்ம | கம்ம | வினை |
| ப்ரேத | பேத | பிணம் |

அயல் மெய் தன்னின மெய்யாதல்

| சமஸ்கிருதம் | பாலி/பிராகிருதம் | பொருள் |
|---|---|---|
| முக்த | முத்த | முத்து |
| உத்பலம் | உப்பலம் | குவளை |
| ஸல்யம் | சல்லம் | எலும்பு |
| ஆஸ்சர்யம் | அச்சரியம் | வியப்பு |
| மோக்ஷ | மோக்கோ | வீடுபேறு |

மெய்—உயிரோடிணைந்து வரல்

| | | |
|---|---|---|
| பத்மம் | பதுமம் (பவுமம்) | தாமரை |
| ரத்னம் | ரதனம் | மணி |

பொது

| | | |
|---|---|---|
| அரண்ய | அஞ்ஞு | காடு |
| வித்வான் | விற்றம | பண்டிதன் |
| அக்ஷி | அச்சி | கண் |
| க்ஷய | கய | அழிவு |

ப, ஸ என்ற எழுத்துக்கள் ஹ ஆதல்

| | | |
|---|---|---|
| ப்’வதி | ஹோதி | இருக்கிறது |
| தஸ | த்’ஹ | பத்து |

ய என்ற எழுத்து ஜ ஆதல்

| | | |
|---|---|---|
| யதி | ஜயி | முனிவன் |

பிற திரிபுகள்

| சமஸ்கிருதம் | பாலி/பிராகிருதம் | பொருள் |
|---|---|---|
| நர : | ணரோ | மனிதன் |
| யஸ : | ஜஸோ | புகழ் |
| ஸ்யாமா | சாமா | கருமை |
| ரிபு | ரிஊ | எதிரி |
| புருஷஂ | புரிஸோ | ஆண் |
| சத்ய | சச்ச | உண்மை |
| அன்ய | அஞ்ஞ | பிற |
| ந்யாய | ஞாய | நியாயம் |
| வ்ரத | வத | விரதம் |
| ஸூக்ஷ்ம | சுகும | நுண்மை |
| த்ருணம் | தணம் | புல் |
| த்வரிதம் | துரிஅம் | விரைவு |
| ஜன்ம | ஜம்மம் | பிறப்பு |
| ஆத்மா | அப்பா | உயிர் |
| விக்ஞானம் | விண்ணானம் | அறிவு |

# பிராகிருதமும் சமஸ்கிருதமும்

தமிழ் அறிஞர் முற்காலத்தில் சமஸ்கிருதம், பிராகிருதம் இரண்டையும் நன்கறிந்திருந்தனர். இலக்கண உரையாசிரியர் அனைவருமே இவ்விருமொழி கற்றவர் என்பதில் ஐயமில்லை. தொல்காப்பிய உரையாசிரியர், யாப்பருங்கல உரையாசிரியர், வீரசோழியம் போன்ற நூலாசிரியர், பிராகிருத மொழியைப் பற்றித் தெளிவாக அறிந்திருந்தனர். அவர்கள் சமஸ்கிருதம் என்பதைச் 'சங்கதம்' என்றும் பிராகிருதம் என்பதைப் 'பாகதம்' என்றும் வழங்கினர்.

தொல்காப்பியர், சொல்லதிகாரத்தில்,

வடசொற் கிளவி வடஎழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே—401

சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்—402

என்றார். இதற்கு நச்சினார்க்கினியர், "வடசொல்லாகிய சொல் உரப்பியும் எடுத்தும் கனைத்தும் கூறும் வடஎழுத்துக்களின் நீங்கி, இருசார் மொழிக்கும் பொதுவாகிய எழுத்தான் இயன்ற சொல்லாம்". இனி சிதைந்தன வரினும் எனப் பொதுப்படக் கூறிய அதனால் 'ஆணை, வட்டம், நட்டம், கண்ணன்' எனப் பாகதமாகச் சிதைந்தனவும் கொள்க" என்று பாகதமாகிய பிராகிருதத்தையும் குறிப்பிடுகிறார். சேனாவரையரும் இளம் பூரணரை மறுக்கு முகத்தான், "தமிழ்ச்சொல் வடபாடைக்கட் செல்லாமை யானும் வடசொல் எல்லாத் தேயத்திற்கும் பொது வாகலானும் இவை வடசொல்லாய் ஈண்டு வழங்கப்பட்டன எனல் வேண்டும்" என்று கூறுகிறார். மேலும் "சிதைந்தன வரினும் எனப் பொதுப்படக் கூறிய அதனால் ஆணை, வட்டம், நட்டம்,

கண்ணன்' எனப் பாகதமாகச் சிதைந்தனவும் கொள்க'' என்றும் கூறுகிறார். இதன் மூலம் உரையாசிரியர் பிராகிருத மொழி குறித்து நன்கறிவர் என்பது தெளிவு.

யாப்பருங்கலக் காரிகை உரையாசிரியர் ஆகிய குணசாகரர் தம் உரையில் ''இந்நூல் என்ன பெயர்த்தோ எனின், 'பாளித்தியம்' எனும் பாகத இலக்கணமும், பிங்கலம் எனும் சந்தோ விசிதியும் போல காரிகை யாப்பிற்றாய்'' குணகாங்கியம் என்னும் கருநாடகச் சந்தமே போல மகடூஉ முன்னிலைத் தாய்'' என்பதுடன், யாப்பருங்கல உரையிலும் பாகத, வடுகச் சந்தங்களைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்; இதன் மூலம், தொல்காப்பியர் காலம் முதலே வடமொழி, பாகதம் குறித்து தமிழறிஞர் நன்கு உணர்ந்திருந்தனர் என்பது தெளிவு.

சங்ககால இலக்கியங்களில் சமண, பௌத்த மதத் துறவி களைப் பற்றிய குறிப்புகள் உள்ளன.

உண்ணா மையின் உயங்கிய மருங்கின்
ஆடாப் படிவத்து ஆன்றோர் போல—அகநானூறு 132

வான் பெயல் நனைந்த புறத்த—நோன்பியர்
கைஊண் இருக்கையின் தோன்றும் நாடன்—நற்றிணை 22.

நீடிய சடையொடு ஆடாமேனிக்
குன்றுறை தவசியர் போல—நற்றிணை 141.

என்பன நீராடா மேனியரும் கையூண் பெறுபவருமாகிய சமணத் துறவிகளைச் சுட்டுகின்றன. ஆதலின் சமணத் துறவிகள் பிராகிருத மொழியறிஞராகத் திகழ்ந்தனர். பௌத்தத் துறவியர் பாலி மொழியறிஞராகத் திகழ்ந்நனர். தமிழகக் கல்வெட்டுக்களும் பிராகிருத மொழியில் உள்ளன. ஆதலின் தொன்னெடுங்காலமாகத் தமிழகத்தில் பிராகிருத மொழி பற்றியும் அறிந்திருந்தனர். பாலி மொழி நூலான தம்மபதக் கருத்து ஔவையாரால் தமிழாக்கப் பட்டதோ எனுமாறு உள்ளது.

நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே

என்ற புறநானூற்றுப் பாடல், தம்மபதப் பாடலாகத் தோன்று கிறது.

பொதுவாகத் தமிழறிஞர் வடமொழி என்று சமஸ்கிருதம், பிராகிருதம் இரண்டையும் குறித்தனர். சமஸ்கிருதம் என்பது வேதமொழியையும், பின்னர் பாணினீயத்தால் செம்மைப் படுத்தப் பட்டதும், இராமாயண, மகாபாரத இதிகாசங்களும், புராணங் களும், ரகுவம்சம் முதலிய காவியங்களும், தத்துவ ஞான நூல்களும் உடைய தொன்மையான மொழியைக் குறிக்கும். இந்த தொன்மை யான சமஸ்கிருதச் சொற்களே திரிந்த நிலையில் பாலியிலும், மிக மிகத் திரிந்த நிலையில் பிராகிருதத்திலும் காணப்படுகின்றன. நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து விழுக்காடு சமஸ்கிருதச் சொல்லின் திரிபுகளாக அமைவதாலும், ஒரு மொழியின் தனித் தன்மைக்குரிய உடலுறுப்புகள், எண்ணுப் பெயர்கள், வினைச் சொல் வடிவங்கள், உறவுப் பெயர்கள் முதலியவற்றின் சொற்களில் புதியன, தனக்கே உரியன என்று இன்மையானும், பாலி, பிராகிருதம் சமஸ்கிருதத்தின், அல்லது வேத மொழியின் திரிபே யன்றி வேறன்று. எனினும் இத்திரிபுக்கு மூல காரணம் திரிபுகளின் சொல் அமைப்பை நோக்கும்போது திராவிடமொழிச் சாயல்கள் இருப்பதால் மூல திராவிட மொழியின் தாக்கத்தாலும், திராவிட இனத்தார் பேச்சு வழக்கினாலுமே இத்திரிபுகள் ஏற்பட்டன என்று உறுதியாகக் கூறலாம்.

பிராகிருதம் என்ற சொல்லும், சம்ஸ்கிருதம் என்ற சொல்லும், முன் செய்தது—செம்மை செய்தது என்ற பொருள்தருதலின் சமஸ்கிருதத்துக்கும் முன்னைய மொழியே பிராகிருதம் என்றும் பிராகிருதத்திலிருந்தே சம்ஸ்கிருதம் தோன்றியது என்றும் சில அறிஞர் கூறுகின்றனர்.

இவர்கள், பிற்கால சமஸ்கிருதத்தினைவிட முற்பட்டதான ருக்வேத கால மொழியின் சில மூலவடிவங்கள் பாலி, பிராகிருத மொழிகளில் இருப்பதாலும், அவை பிற்காலச் சம்ஸ்கிருதத்தில் வழங்கப்படாமையாலும் மூலவேத மொழியின் நேரடிச் சிதைவு பிராகிருதம் என்றும், அந்த சிதைந்த மொழியினைச் செம்மைப் படுத்தியதே சமஸ்கிருதம் என்றும் கூறுவர். ஆனால் இரு மொழி களின் இலக்கண அமைப்பும், திரிபு முறைகளும் ஆராய்ந்தால் அது பொருந்துவதாக இல்லை. வான்மீகி ராமாயணம் சமஸ்கிருத மொழி இலக்கியமாக ஏற்கப்படுகிறது. வேதோபநிடதங்களுக் கடுத்து எழுந்த சமஸ்கிருத முதற்காவியம் அதுவாகும். அவ்விலக் கியம் கி.மு. மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பு அல்லது இரண்டாயிரம் ஆண்டுகட்கே முன்னையது. அக்காலத்திய பிராகிருத இலக் கியமோ, அல்லது பாலிமொழி இலக்கியமோ இல்லை.

கி.மு. ஆறாம் நூற்றாண்டுக்கு முன்னைய புத்தர்கால பாலி மொழியோ சமஸ்கிருதத்தின் திரிபு என்று தெரிவதாலும், கி.மு. முதல் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட இலக்கியங்களையும் தத்துவங் களையும் உடைய பிராகிருதமும் சமஸ்கிருதத்தின் திரிபே என்பது தெளிவு.

வடமொழிக்கே உரிய உப சர்க்கங்களைக் கையாள்வதாலும், வடமொழியின் வினைவிகுதிகளை எளிமையாக்கிப் பயன்படுத்துவ தாலும், வடமொழியின் (சமஸ்கிருதத்தின்) திரிபு பிராகிருதம் என்பதே பொருந்தும்.

சமஸ்கிருதத்தின் இருமை விகுதிகள், காலங்காட்டும் பல்வேறு விகுதிகள் பாலி, பிராகிருதத்தில் இல்லை. எ.ஒ. எனும் குறில்கள் இருந்தன. இவை திராவிடமொழிச் செல்வாக்கைக் காட்டுமே யன்றிச் சமஸ்கிருதத்தினைக் கடந்த தனித்தன்மையைக் காட்டாது' ஏனெனில், எகர, ஒகரச் சொற்கள் தனித்து இல்லை என்பதையும் கவனிக்கவேண்டும்.

வேதமொழியின் இலக்கிய வடிவம் சமஸ்கிருதம் என்றும் மக்களின் பேச்சு வழக்கில் திரிந்த மொழி பிராகிருதம் என்றும் கூறுகிறோம். வேதமொழியைச் சமஸ்கிருதம் என்றழைப்பது மரபாகி விட்டது. ஆதலின் சமஸ்கிருதத்திலிருந்தே பிராகிருதம் வந்தது என்பதும் சரிதான். "இயல்பான மூலமொழி சமஸ்கிருதம். அதினின்றும் உருவானது பிராகிருதம்" என்று ஹேமசந்திரன் எனும் பிராகிருத இலக்கண நூலாசிரியன் கூறுகிறான். இக் கருத்தையே வாசுதேவர் தம் கற்பூர மஞ்சரி உரையாகிய சஞ்சீவினி யில் கூறுகிறார்; 'பிராகிருத சர்வஸ்வம்' எனும் நூலில் மார்க்கண்டேயர் கூறுகிறார்.

மல்லிநாதரின் சமகாலத்தவரான லக்ஷ்மீதார், 'ஷட் பாஷா சந்திரிகை'யில் 'குமாரர், பாணினி ஆகியவர்களால் செம்மைப் படுத்தப்பட்டது சமஸ்கிருதம்' என்கிறார்.

பொதுவாக ஒரே மூல மொழியின் காலவேறுபாட்டில் எழுந்த இரு நிலைகளே சமஸ்கிருதமும் பிராகிருதமும் என்பது தெளிவு. பத்தாம் நூற்றாண்டில் கூர்ஜர நாட்டைச் சேர்ந்த பின்னமாலா எனும் இடத்தில் வசித்த சித்தரிஷி என்பவர் 'உபமிதி பாவபிரபஞ்ச கதா' எனும் உருவகக் காவியம் படைத்துள்ளார். அதில் அவர்

"மொழிகளில் சமஸ்கிருதம் பிராகிருதம் முதன்மைக்குரியன வென்றும் அவற்றுள்ளும் சமஸ்க்ருதம் மனத்தில் நிலைத்தல்

கடினம் என்றும், சாதாரண மக்களும் புரிந்து கொள்வதாகவும், காதுக்கினிமையுடையதுமாகப் பிராகிருதம் இருப்பதாக''க் குறிப்பிட்டுள்ளார்.

ஹாலனின் காதா சப்த சதியிலும், வாக்பதி ராஜனின் கவுடவத காவியத்திலும் பிராகிருதம் இனிமையும் மென்மையும் எளிமையும், இயற்கை நயமும் உடைய மொழியாகச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. வடமொழி நாடகங்கள், அலங்கார சாஸ்திர நூல்கள், மேற்கோள் பாடல்கள் முதலியவற்றிலும் பிராகிருதம் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

பிராகிருதத்தில் பல உட்பிரிவுகள் உள்ளன. மொழியின் வட்டார வழக்குகளைப் போன்றதே அவை. மகாராஷ்டிரம், சௌராஷ்டிரம் (குஜராத்), கௌடம் (வங்காளம்), பைசாசம் (மேற்கு எல்லைப்புறம், சிந்து மாநிலப் பகுதி), மாகதி (பீகார் மாநிலப் பகுதி) முதலிய பல் இடவேற்றுமையினால் எழுந்தன. ஆபீரம் என்பது இடையர்கள் பேசிய மொழி.

பிராகிருத முதல் இலக்கண நூலாசிரியர் வரருசி மகாராஷ்ட்ரீ, மாகதி, ஸௌரசேனி, பைசாசி ஆகிய நான்கு பிரிவு களை மட்டுமே குறிப்பிட்டுள்ளார்.

பிராகிருத சர்வஸ்வ நூலாசிரியர் மார்க்கண்டேயர் ''மகாராஷ்ட்ரீ, சௌரசேனீ, ப்ராச்யா, அவந்தீ, மாகதீ'' என்று ஐந்து பிரிவுகளைக் குறிப்பிடுகிறார். மாகதியில் 'அர்த்த மாகதி'யும் அடங்கும். இனங்களைப் பொறுத்து சாகாரீ, சாண்டாலீ, சாபரீ, ஆபீரிகா, சாகீ என்றும் ஐந்து பிரிவுகள் பிராகிருதம் பேசும் மக்கள் சாதிகளின் மூலம் ஏற்பட்டவை.

ஆந்த்ரீ, த்ராவிடீ என்று ஆந்திர, தமிழக மக்கள் பிராகிருதம் பேசினர் என்பதால் இப்பிரிவுகளும் உண்டு. நாகரம், பாஞ்சாலீ என்ற பிரிவுகளும் உள.

ஏழாம் நூற்றாண்டில் தண்டி தம் காவியாதரிசத்தில் ''சமஸ்கிருதம், பிராகிருதம், அபப்பிரம்சம்'' எனும் மூன்றினையும் குறிப்பிட்டு, பிராகிருதப் பிரிவுகளான ஸௌரசேனி, கௌபீ, லாடீ ஆகியவற்றையும் குறிப்பிட்டுள்ளார்.

இவ்விதமாகப் பிராகிருத மொழியில் பல்வேறு உட்பிரிவு களை அந்தந்த நாட்டின் பெயரில் வழங்கினர். அவற்றுள் மகாராஷ்ட்ரீ, ஸௌரசேனீ, மாகதி, பைசாசி ஆகிய நான்கும் மிகப் பழமையான காலந்தொட்டு இலக்கியங்களோடு திகழ்ந்தன. தந்

# தமிழும் பிராகிருதமும்

திராவிட இனக்கலப்பின் விளைவாகவே பிராகிருதம் தோன்றியது என்பதை அம்மொழியின் இலக்கண அமைப்பும், தமிழ்மொழியின் இலக்கண அமைப்பும் எடுத்துக் காட்டிவிடுகிறது. சில நூறு தமிழ்ச்சொற்கள் பிராகிருதத்திலும், சில நூறு பிராகிருதச் சொற்கள் தமிழிலும் கலந்திருப்பதை அறிஞர் எடுத்துக் காட்டுவர். இது இனக்கலப்பற்ற மொழிகளிலும் தொடர்புகளின் காரணமாக ஏற்படுவதே. பாலி மொழியில் ஹுரம் என்று புறம் என்ற தமிழ்ச் சொல் காணப்படுகிறது.

அத்தை என்ற பொருளில் அத்தா என்றும்
பிள்ளை என்ற பொருளில் பீலுஆ என்றும்
பருத்தி என்ற பொருளில் பலஹீ என்றும்
தீர்தல் என்ற பொருளில் தீரஏ என்றும்
உள்ளே என்ற பொருளில் உலே என்றும்

பல தமிழ்ச் சொற்கள் காணப்படுகின்றன.

வயிறு என்ற பொருளையுடைய 'பொட்ட' என்ற தெலுங்குச் சொல் "போட்டம்" என்றும், நெய் என்ற பொருளையுடைய 'துப்ப' என்ற கன்னடச் சொல் 'துப்ப' என்றும் பிராகிருதத்தில் காணப்படுகிறது. இதுபோல சில நூறு சொற்கள் தேடிக் காண முடியும். இதை மட்டும் வைத்துக்கொண்டு நாம் ஒரு முடிவுகட்ட முடியாது. திருமல ராமச்சந்திர என்ற பிராகிருத மொழி அறிஞர் "காதாசப்த சதிலோ தெலுகுபதாலு" என்ற கட்டுரையில் நாற்பது சொற்களை எடுத்துக் காட்டுகிறார். வையாபுரிபிள்ளையும் தமது மொழியியற் கட்டுரைகளில், ஐம்பது சொற்களை எடுத்துக்காட்டியுள்ளார். ஆர். நரசிம்ஹாச்சாரியார் கன்னட கவிஞர்கள்

வரலாற்றில் ஒரு சில சொற்களை எடுத்துக் காட்டியுள்ளார். இது குறித்து விரிவான ஆய்வு மேற்கொள்ளப்பட வேண்டும்.

பிராகிருத-தமிழ் இலக்கண ஒப்புமைகள் மூலமும் நாம் திராவிடக் கூறுகளை நிறுவமுடியும். சமஸ்கிருதத்தில் எ. ஒ. எனும் குறில் இல்லை என்பது யாவரும் அறிவர். வடமொழியில் இல்லாத தமிழ் எழுத்துக்கள் எ. ஒ. ற, ன, ழ. என்ற ஐந்தாகும். இந்தக் குறில் எ. ஒ. இரண்டும் பாலி, பிராகிருத மொழிகளில் உள்ளன. பாலி இலக்கண ஆசிரியர் கச்சாயன (காத்யாயனர்) மொக்கலான (மௌத்தல்யாயனர்) என இருவர் ஆவர். கச்சாயனரின் இலக்கண நூல் ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்தது என அறிஞர் கூறுவர். எனினும் சிலர் புத்தரின் சீடராகிய கச்சாயனர் இவர்தான் என்றும், இவர் காலம் கி. மு. ஆறாம் நூற்றாண்டு என்றும், சிலர் அசோகன் காலத்தவர் என்றும், சிலர் முதலாம் நூற்றாண்டினர் என்றும் கருதுவர். ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த புத்தகோசரின் அட்டகதா நூல்களில் இவரைப் பற்றிய குறிப்போ, இந்நூலைப் பற்றிய குறிப்போ இல்லாததால் ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் என்பதே பெரும்பாலோர் துணிவு. கச்சாயனர் மரபாகப் பல இலக்கண நூல்கள் பின்னர் பாலியில் வெளிவந்துள்ளன.

மொக்கலான வியாகரணம் இயற்றிய மௌத்கல்யரின் காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டாகும். இலங்கையிலுள்ள தூபராம விகாரத்தில் இருந்தவர். இவரது நூலைப் பின்பற்றிப் பல இலக்கண நூல்கள் வெளிவந்தன. அவற்றை மொக்கலான மரபு என்பர். மொக்கலான வியாகரணத்தின் விருத்தியாசிரியருள் வாசிஸ்ஸர ராகுல (வாகீஸ்வர ராகுலர்) சிறந்த அறிஞர். இவ்வுரை பாலி, சிங்களம் கலந்த நடையிலுள்ளது. இவருக்குப் பாலி, சம்ஸ்கிருதம், பிராகிருதம், சிங்களம், தமிழ் ஆகிய மொழிகளில் பெரும் புலமை உண்டு. இவரது காலம் பதினைந்தாம் நூற்றாண்டாகும். 13ஆம் நூற்றாண்டினராகிய பிக்கு அக்கவம்ஸரின் சத்[3]த[3]நீதி, 14ஆம் நூற்றாண்டினராகிய தருமகீர்த்தியின் பாலாவதாரம் முதலிய பல சிறந்த இலக்கண நூல்கள் பாலி மொழியில் உள்ளன.

இவ்விலக்கண நூல்களில் எ. ஒ. என்ற குறில்களும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. த்[3]வேத்[3]வே சவண்ணா என்ற மொக்கலான வியாகரண சூத்திரம் இதைத் தெளிவாக்கும். பிராகிருதத்திலும் எ. ஒ. இருந்ததாக அறிஞர் குறிப்பிடுகின்றனர்.

கூட்டெழுத்துக்கு முன்புள்ள ஏ. ஓ. இரண்டும் குறிலாகும் என்பது விதி. எனினும் பிராகிருதத்துக்கும் பாலி மொழிக்கும் தனி வரிவடிவம் இல்லாததாலும் வடமொழிக்குரிய தேவநாகரி லிபியைப் பயன்படுத்தி வந்ததாலும் அதற்குத் தனி எழுத்துருவம் தற்போதில்லை.

பிராகிருதத்தில் வடமொழிக்குரிய புலுதம், விசர்க்கம், முதலியனவும் இல்லை. ரு, ரூ, லு, லூ என்பனவும் இல்லை.

அ. ஆ. இ. ஈ. உ. ஊ. எ. ஏ. ஒ. ஓ.

என்பவை மட்டும் பிராகிருத உயிரெழுத்துகள் ஆகும். தமிழ் ஐ. ஔ. என்ற எழுத்துகள் உயிரெழுத்துகளாக உள்ளன. இவ்விரண்டும் சமஸ்கிருதத்திலும் உள்ளன. வடமொழித் தொடர்பால் நமது எழுத்து முறையில் இவை சேர்ந்திருக்கலாம் என்று கருத இடமுண்டு. மொழி தோன்றிய நெடுங்காலத்திற்குப் பின்னர் எழுத்து முறை தோன்றுகிறது. எழுத்துகளும் காலந்தோறும் மாறுபட்டு, புதுப்புது வரி வடிவங்களை ஏற்றுக்கொண்டு வந்துள்ளன. கல்வெட்டியலார் தரும் ஆய்வுகள் இதற்குச் சான்று பகர்கின்றன.

பிராகிருதத்தில் ங, ஞ, ஸ, ஷ, என்ற மெய் எழுத்துகளும் இல்லை. ள, ற என்பவையும் இல்லை.

கூட்டெழுத்துகள் அமைப்பை நோக்கும் போது தமிழ் மரபை ஒட்டி இருப்பதைக் காணமுடியும். வடமொழியில் தன்னின எழுத்துகள் மட்டுமன்றிப் பிற மெய்களின் கூட்டுறவே மிகுதியாகும். தமிழில் தன்னினக் கூட்டே மிகுதி. ரு, ரூ என்ற வடமொழி எழுத்துக்கள் இ, ரி என்று தமிழ் மரபுப்படியே திரியும்.

| | |
|---|---|
| ருக்ஷ : | ரிச்சோ |
| ருஷி | இஸீ |

வடமொழியில் ஒருமை, இருமை, பன்மை என்ற மூன்று எண்கள் உள்ளன. பாலி, பிராகிருதங்களில் திராவிட மரபுப்படி ஒருமை—பன்மை என்ற இரு எண்களே உள்ளன. இருமை வடிவம் இல்லை.

நான்காம் வேற்றுமை தமிழில் கு, தெலுங்கில் கை, கன்னடத்தில் கெ[3] என்றாகும். இதுபோன்றே பிராகிருதத்தில் க ஏ' என்று திராவிட வடிவம் பெற்றுள்ளது என்று திருமல ராமச்சந்திரா கூறுகிறார்.

இது போன்ற சொல் உச்சரிப்பு முறையில் பிராகிருதம் முழுவதும் தமிழோடு ஒத்துள்ளது. இதிலிருந்து பெறும் முடிவு என்னவென்றால், தூய ஆரியச் சார்புடைய மொழி சமஸ்கிருதம் என்றும், தூய திராவிடச் சார்புடைய மொழி தமிழ் என்றும், ஆரிய திராவிடக் கலப்பின் விளைவானது பிராகிருதம் என்றும், தெலுங்கு மொழியும் இத்தகையதே என்றும் தெளிவாகிறது. வட ஆரிய மொழிகட்கும், தென் தமிழ் மொழிக்கும் இடையே நடுப்பகுதியில் உள்ளதால் தெலுங்கு மொழியில் ஈரினக் கலப்பின் விளைவு மிகுதியாக இருத்தல் இயல்பே. அதுபோன்றே பிராகிருத மொழிப்பேரிலக்கியங்கள் தோன்றியதும் ஆந்திர, மகாராஷ்டிரப் பகுதிகளே யாகும். தெலுங்கு மொழி பிராகிருதத்திலிருந்தே தோன்றியது எனச் சிலு கூரி நாராயணராவ் போன்ற பேரறிஞர் கருதியதும் ஈண்டுக் கருதத்தக்கது. பிராகிருத, தெலுங்கு மொழிகளின் நெருங்கிய உறவே இத்தகு கருத்து தோன்றக் காரணமாகும்.

# பிராகிருத இலக்கியம்

பிராகிருத மொழியில் காவியங்கள், இலக்கண நூல்கள், சமண தத்துவ நூல்கள், அறநூல்கள் இன்று கிடைத்துள்ளன. பிராகிருதம் என்று இங்குக் காண்பது "பாலி" மொழி நூல்களைத் தவிர்த்து, கி.பி. முதலாம் நூற்றாண்டிலிருந்து கி. பி. பத்தாம் நூற்றாண்டளவில் இருந்த பிராகிருத இலக்கியம் ஆகும். அதற்குப் பிற்பட்ட பிராகிருதமே அபப்பிரம்சம் என்ற பெயர் பெறுவதால் அதிலுள்ள நூல்களைச் சேர்க்கவில்லை.

வடமொழி இலக்கிய வரலாற்றை வைதிக சாஹித்யம், லௌகிக சாஹித்யம் என்று இருவகையாகப் பகுத்துக் காண்பது போல, பாகத இலக்கியத்தைச் சமண சமயத் தொடர்பானதும் தத்துவத்துறை சார்ந்ததுமான நூல்கள் ஒருவகையாகவும் காவிய நாடகங்கள் சார்ந்த இலக்கிய நூல்களை ஒரு வகையாகவும் பகுத்துக் காண்பது மரபு ஆகும். நம் நாட்டில் தொன்மைக் காலத்தில் தத்துவ, இலக்கிய, கலை நூல்கள் ஒருங்கே பின்னிப் பிணைந்திருந்தன. ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போல நமது இலக்கியத்தில் தத்துவமும், கவிதையும் இணைந்தே இருந்தன.

பிராகிருத இலக்கிய வரலாற்றில் சமண ஆகமங்கள் முக்கிய இடம்பெறுகின்றன. சமணத் தத்துவ நூல்கள் பெரும்பாலும் பிராகிருதத்தில்தான் அமைந்துள்ளன. சமஸ்கிருதத்திலும் பல நூல்கள் உள்ளன. சமண ஆகம பிராகிருதத்துக்கு 'அர்த்தமாகதி' என்று பெயர். பௌத்த தத்துவ நூல்களான திரிபிடகங்கள் உள்ள பிராகிருதத்தை 'மாகதி' என்றே முன்பு அழைத்தனர். பிற்காலத்தில் அதனைப் 'பாலி' என வழங்கத் தலைப்பட்டனர். பாலி நூல்கள்—சமஸ்கிருதத்துக்கு மிகவும் நெருக்கமான திரிபு

மொழியிலமைந்ததாக உள்ளன. சமணப் பிராகிருத நூல்களோ பாலியைவிட அதிகமாகத் திரிந்துவிட்ட மொழியாக அமைந்துள்ளன. அதற்குக் காரணம் கால இடைவெளியாகும்.

பாலி நூல்களாயினும், கலப்பு வடமொழி (Hybrid Sanskrit) எனப்படும் மகாயானத்தைச் சார்ந்த வடமொழி நூல்களாயினும் தொடங்கும்போது 'ஏவம் மே அதம்' என்றே தொடங்கும். இதன் பொருள் "என்னால் இவ்விதம் கேட்கப்பட்டது" என்பதாகும். இதிலிருந்து கேள்வி ஞானத்தின் மூலமே அந்நூல்கள் தொகுக்கப்பட்டன என்பது தெளிவு. எனினும் கி. மு. மூன்றாம் நூற்றாண்டிற்கு முன்பே புத்தர் உரைகள் இன்றைய நிலையிலுள்ள திரிபிடகங்களாகத் தொகுக்கப்பட்டுவிட்டதால் அதன் பழைமை காரணமாக அம்மொழி சமஸ்கிருதத்துக்கு நெருக்கமாக அமைந்துள்ளது.

புத்தருக்கு முன்பு ஐம்பதாண்டுகள் மூத்தவர் மகாவீரர். அவருக்கு இருநூறாண்டுகள் முன்பு இருந்தவர் பார்சுவநாதர். இவ்விருவரும் சரித்திர காலத் தீர்த்தங்கரர் ஆவர். இவர்கட்கு முன்புள்ள மற்ற இருபத்திரண்டு தீர்த்தங்கரர் குறித்துச் சரித்திரச் சான்றுகளோ இலக்கியச் சான்றுகளோ இல்லை. எனினும் வைதிக, சமண புராண மரபுகளில் அவர்களது சரித்திரங்கள் புனைந்துரைகளோடு கலந்துள்ளன. ஆதிபகவனாகிய ருஷப தேவர் முதல் பார்சுவநாதர் வரையுமுள்ள இருபத்து மூன்று தீர்த்தங்கரரின் நேரடி உபதேசங்களோ, உரையாடல்களோ நமக்குக் கிடைக்கவில்லை.

மகாவீரரின் நேரடி உரையாடல்களாகச் 'சுவேதாம்பர' சமணப் பிரிவினரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட பகவதி சூத்திரம், போன்ற சில நூல்களில் சில உபதேசங்களைத் தொகுத்துள்ளனர். இந்நூல்களின் தொகுக்கப்பட்ட காலம் உறுதியாகத் தெரியவில்லை. தேவேந்திரகனி என்பவரால்தான் ஐந்தாம் நூற்றாண்டில் இத்தொகை நூல்களின் இறுதி வடிவம் உருவாக்கப்பட்டுள்ளது. திகம்பர சமணர் தொன்மையான ஆகம நூல்கள் முற்றும் அழிந்து பட்டதாகக் கருதுவர். சுவேதாம்பரரால் இன்று வழக்கிலுள்ள தசவைகாலிகம், உத்தராத்யயனம், ஆசாராங்கம் போன்றவைத் திகம்பரர்களால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. எனினும் இந்த நூல்களின் பெயர்களை மட்டும் குறிப்பிட்டு அவை வழக்கழிந்தன என்று கூறுவர். ஆதலின் சமண ஆகம நூல்களின் தொன்மை

குறித்து ஐயப்பாடு எழுதல் இயல்பே. பாலி திரிபிடக நூல்களின் சாயல் இதில் தெளிவாகப் புலப்படுவதால் திரிபிடகங்கட்கு இணையான நூல்கள் இருக்கவேண்டிப் பின்னோர் தொகுத்து விட்ட நூல்களோ என்று ஐயுறுதற்கிடமுண்டு.

எப்படியாயினும், கி.பி. முதல் நூற்றாண்டில் ஆந்திர நாட்டிலிருந்த புஷ்பதந்தரும் பூதபலியும் இயற்றிய ஷட் கண்டாகமும், குந்த குந்தரின் பிரவசனசாரம், பஞ்சாஸ்தி காயம், சமய சாரமும் மிகப் பழைமையான ஆகமநூல்கள் ஆகும். ஆகம நூல்களும், அவற்றின் விளக்க உரைகளும் விரிவுரைகளும் ஆனப் பிராகிருத நூல்கள் மிகப்பல. சூத்திர நூல்கள், நிர்யுக்தி, பாஷ்யம், சூர்ணிகை, டீகை முதலிய விளக்க நூல்கள் குறித்து விரிவாகக் கூற இங்கு இடமில்லை. ஒரு சில சுவையான செய்தி களை மட்டும் சுட்டிக்காட்ட விழைகிறேன்.

திட்டிவாய என்னும் திருஷ்டிவாதம் எனும் தத்துவ தரிசனங் களைப்பற்றிக் கூறும் ஆகம நூலில் வரும் கதை இது.

ஒரு சமயம் பாடலிபுத்திரத்தில் பன்னிரண்டு ஆண்டுகள் பஞ்சம் ஏற்பட்டது. உணவின்மையால் சமணமுனிவர் கடற்கரை ஊர்கட்குச் சென்றனர். பன்னீராண்டு கழிந்ததும், மீண்டும் பாடலிபுத்திரத்திற்குச் செழிப்பேற்பட்டதும் முனிவர் திரும்பி வந்தனர். ஆகமநூல்கள் நினைவிலிருந்ததைத் தொகுத்தனர். பன்னிரு ஆகமங்களில் பதினொன்று மட்டுமே கிடைத்தன. திட்டி வாதம் மட்டும் தெரிந்தவர்கள் யாருமில்லை. பத்திரபாகு முனிவர் நேபாளத்தில் அப்போது தங்கியிருந்தார். அவரிடம் இருவரை அனுப்பிவைத்து, திட்டிவாதம் கற்றுவரச் செய்தனர். அவருக்கு அப்போது கற்பிக்க இயலவில்லை. தூலபத்திரர் மீண்டும் சென்று நெடுநாள் அருகிருந்து சில கற்று வந்தார் எனக் கூறப்படுகிறது.

இக்கதை நமது இறையனார் களவியலுரைகாரரின் பாண்டி நாடு பன்னீராண்டு வற்கடம் போந்ததும் பொருள் அறிவார் இல்லை என்று வருந்தியதுமான கதையை நினைவூட்டுகிறது.

ராய பஸேணஇய எனும் ராஜப்ரஸ்னீய எனும் ஆகமம் உள்ளது. இதற்கு உரை மலயகிரி என்பவர் பன்னிரண்டாம் நூற்றாண்டில் இயற்றியுள்ளார். இந்நூலில் ராஜாபிரதேசி என்பவருக்கும் சமண இளந்துறவியாகிய கேசி என்பவருக்கும் நடந்த உரையாடல்கள் சுவை மிக்கவை. கேசி பார்சுவநாதரின் சீடராவர்.

"தஏ ணம் கேஸீகுமாரஸமணே பஏஸிம் ராயம் ஏவம் வயாஸி" என்று தொடங்கும் அவ்வுரையாடலின் தமிழாக்கம் இது.

"இளம் துறவியாகிய கேசி, மன்னன் பிரதேசியிடம் கூறினார். பிரதேசி ஒரு மாளிகையின் நான்கு சுவர்கட்கும் உள்ளே கதவு களை எல்லாம் நன்றாக மூடிவிட்டு, காற்றுப்புக முடியாதபடி அடைத்துள்ளதாகக் கற்பனை செய்துகொள்! அந்த அறைக்குள் ஒருவன் ஒரு பேரிகையை முழக்குவதாக வைத்துக்கொள்! அந்தச் சத்தம் வெளியே கேட்குமா?"

"ஆம்! சத்தம் வெளியே கேட்கும்!"

"அந்த அறையில் ஏதாவது துளை இருக்கிறதா? அதனால் அந்த சத்தம் வெளியே வருகிறதா?"

"துளை ஒன்றும் இல்லை"

"பிரதேசி மன்னனே! அதுபோலத்தான் ஜீவனுடைய கதியை யாதும் தடுக்க இயலாது. உலகம், மலைகள், பாறைகள் அனைத்தையும் ஊடுருவிக் கடந்து செல்லும். ஆதலின் உயிர் வேறு, உடல் வேறு என்ற உண்மையை நீ நம்புவாயாக!"

உத்தராத்யயன சூத்திரம் சிறந்த ஆகம நூலாகும். இதனையும் ஆசாராங்கம், முதலியனவற்றையும் ஹெர்னன் ஜாகோபி ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். ஜைன சூத்திரங்கள் என்ற பெயரில் Sacred Books of the East எனும் நூல் தொகுதியினை மாக்ஸ்முல்லர் ஆசிரியராக இருந்து வெளி யிட்டார். உத்தராத்யயன சூத்திரம் கூறும் உபதேசம் இது.

"புல்நுனியிலுள்ள பனித்துளி போன்றதே உலக இன்பம். ஆயுளும் அதுபோன்று நிலையற்றது. அப்படி இருக்க ஏன் நிலை யான நன்மைதரும் நெறியில் புக முயற்சிக்கக் கூடாது?"

சிரேணிக மகாராஜா ஒரு முனிவரிடம் சென்று தாங்கள் ஏன் இளம்வயதிலேயே துறவு பூண்டீர்கள் என்று கேட்கிறான். அப்போது அத்துறவி கூறுகிறான், "நான் அனாதை! எனக்குத் தலைவன் யாரும் இல்லை. அன்பும் அருளும் காட்டும் ஒரு நண்பன் இன்றுவரை எனக்குக் கிட்டவில்லை."

அப்போது மன்னன் "நான் உனக்குத் தலைவனாக இருப்பேன்! உன் நண்பர்களுடன் கூட இருந்து இன்பம் துய்ப்பாயாக" என்கிறான். அப்போது துறவி,

அப்பணாவி அணாஹோ ஸி
ஸேணிஆ! மக$^{3}$ ஹாஹிவா!
அப்பணா அணாஹோ ஸந்தோ
கஸ்ஸ ணாஹோ ப$^{4}$விஸ்ஸஸி''

ஏ! மகத மன்னனே! சிரேணிகனே!

நீயே அநாதையாக இருக்கிறாய்! நீ எப்படி பிறருக்கு நாதனாக முடியும்? என்றானாம்.

ஒரு சமயம் ஒரு பக்கீர்—டில்லி சக்கரவத்தியைக் கண்டு யாசிக்க வந்தான்! அப்போது அந்தச் சக்கரவர்த்தி இறைவனிடம் வேண்டிக் கொண்டிருந்தார். அதைக் கண்டு அத்துறவி திரும்பிச் சென்றார். அதைக் கண்ட மன்னன் ஏன் வந்தீர்? ஏன் திரும்பிவிட்டீர் என்று கேட்டான். அதற்கு அந்த துறவி ''உன்னிடம் யாசிக்கத்தான் வந்தேன்! நீயோ இறைவனிடம் இன்னும் யாசித்துக்கொண்டிருக் கிறாய்! யாசகனிடம் யாசிப்பதைவிட அந்த இறைவனிடமே யாசிக்கலாம் என்று திரும்பிவிட்டேன்.'' என்றாராம். இது போலவே உத்தராத்யயனமும் கூறுகிறது. சிரேணிக மகாராஜா என்பது அஜாத சத்ருவின் தந்தை பிம்பிசாரன் என்று சில அறிஞர் கூறுவர்.

ஆகம நூல்களிலும் அதன் உரைகளிலும் சிறந்த தத்துவக் கருத்துகள் உள்ளன. இவை குறித்துத் தனி நூல்கள் பல உள்ளன.

பிராகிருதத்தில் கதை கூறும் நூல்கள் பல உள்ளன. தரங்கவதீகதா, பாதலிப்த சூரி என்பவர் இயற்றிய முதல் கதை கூறும் நூலாகும். இது தற்போது கிடைக்கவில்லை. இக்கதையைச் சார்ந்து ''தரங்கலோலா'' எனும் நூல் நேமிசந்திரகணி என்பவர் இயற்றினார். பேராசிரியர் லாய்மன் ஜெர்மன் மொழியில் இந் நூலை மொழிபெயர்த்துள்ளார். இந்நூல் ஒன்பதாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. வசுதேவஹிண்டீ எனும் நூல் புகழ் மிக்க படைப்பாகும். இந்நூலைச் சங்கதாஸகணி, தர்மஸேன்கனி என்பவர் இயற்றினார். இவர்களது காலம் ஐந்தாம் நூற்றாண்டாகும்.

வசுதேவஹிண்டி—கண்ணனின் தந்தை வசுதேவருடைய கதையைக் கூறுவதாகும். மகாபாரதம், பிருகத்கதா முதலிய நூல் களிலுள்ள பல கதைகள் இதில் உள்ளன. இந்நூல் குறித்துப் பின்னர் காண்போம்.

'சமராயிச்சகஹா' எனும் சமராதித்யன் கதை உஜ்ஜயினி மன்னன் சமராதித்தனின் கதையாகும். ஹரிபத்ர சூரி இயற்றிய இந்நூல், டாக்டர் ஹெர்மன் ஜாகோபியால் 1926இல் வெளியிடப் பட்டது. இந்நூலைச் சமஸ்கிருதச் சாயையுடன் பண்டிட் பகவான்தாஸ் என்பவர் 1938இல் வெளியிட்டிருக்கிறார். ஹரிபத்ர சூரி ஆகம நூல்கட்கு விளக்க உரைகள் எழுதிப் புகழ் பெற்றவர். எட்டாம் நூற்றாண்டில் இருந்தவர். சமராதித்ய கதாவில் உள்ள ஒரு உரையாடல் :

பிங்ககன் : பஞ்சபூதங்களைத் தவிர்த்துத் தனியாக ஒரு ஜீவன் என்ற தனிப் பொருள் இல்லை. அப்படித் தனிப்பட்ட ஜீவாத்மா இருக்குமானால், பல உயிர்களைக் கொன்ற எனது தாத்தா நரகத்திலிருக்க வேண்டும். அவர் என்னை நல்வழிப் படுத்த உபதேசம் செய்ய வந்திருக்க வேண்டும். ஆனால் இது வரை அவர் வரவே இல்லை. ஆகையால் ஜீவாத்மா உடலுக்கு வேறுபட்ட தனிப் பொருளாக இல்லை.

விஜயசிம்மன் : எப்படி இரும்புச் சங்கிலியால் பிணிக்கப்பட்டுச் சிறையில் கிடக்கும் திருடன் தான் விரும்பினும் தன் சுற்றத் தாரைச் சந்திக்க இயலாதோ அதுபோலவே நரகத்திலிருப்ப வரும் வெளியே வர இயலாது.

பிங்ககன் : என் தந்தை மிக நல்லவர். அவர் சமண தீட்சை பெற்றவர். அவர் உங்கள் கொள்கைப்படிச் சுவர்க்கத்தில் இருப்பார். என்மேல் மிகவும் அன்புடையவர். அவரும் இது வரை சுவர்க்கத்திலிருந்து வந்து உபதேசம் செய்யவில்லையே

விஜயசிம்மன் : எப்படி ஒரு தரித்திரன் அயல்நாடு சென்று ஒரு நாட்டின் மன்னனாகிவிட்டால், தன் முன்னைய சுற்றத்தாரை மறந்துவிடுகிறானோ அதுபோல சுவர்க்கத்திலிருப்பவர் மனிதப்பிறவியை மறந்துவிடுகிறார்.

பிங்ககன் : ஒரு திருடன் உடலைக் கண்டதுண்டமாக வெட்டிப் பார்த்தாலும் கூட உயிர் தனித்துக் காணப்படுவதில்லை. ஆதலின் உடல் வேறு உயிர் வேறு என்பது இல்லை.

விஜயசிம்மன் : இந்தச் சான்று சரியில்லை. அரணிக்கட்டையைத் துண்டு துண்டாக வெட்டினாலும் அதில் தீ காணப்படாது. அதனாலேயே அரணிக்கட்டையில் தீ இல்லை எனக் கூற முடியாது. அதுபோல உடலினின்றும் தனிப்பட்ட உயிர் (ஜீவாத்மா) இருக்கிறது.

இதுபோலக் கதைக் காவியங்களிலும் தத்துவச் சிந்தனைகள் உள்ளன. 'விறகினில் தீயினன்' என்று திருநாவுக்கரசர் கூறியது போலவே இங்கும் அரணிக்கட்டை உவமை கூறப்பட்டுள்ளது.

ஹரிபத்ர சூரி, து[3]த்தக்காண எனும் தூர்த்தாக்யாணம் எனும் கதைக் காவியமும் படைத்துள்ளார். இதில் இராமாயணம், மகாபாரதம், புராணங்களிலுள்ள கதைகளைத் தொகுத்தளித்துள்ளார்.

உத்யோதன சூரியின் குவலயமாலா, பத்தாம் நூற்றாண்டு இலக்கியமாகும். இதில் பதினெட்டு மொழிகளைப் பேசும் மக்களைப் பற்றிய வருணனை உள்ளது. இதில் கோ[3]ல்ல தேச என்பது சோழ நாட்டைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். இங்கு மக்கள் கருநிறமுடையவர், கடுஞ்சொற் பேசுபவர், மிகுந்த காமவிழைவுள்ளவர். இவர்கள் 'அட்டே[3]' என்று வழங்குவர் என்று கூறப்பட்டுள்ளது. 'அடே' என்பது தமிழ் வழக்கேயாகும்.

கர்னாடக மக்கள் செருக்கும் காமவிழைவுமுடையவர் சினம் மிக்கவர் என்றும், ஆந்திரநாட்டு மக்கள் பெண்கள்பால் நேயமும் போரில் விருப்பமும் உள்ளவர், அழகிய உடலும், காரமான உணவு உண்பவர் என்றும் கூறப்பட்டுள்ளது.

ஜினேஸ்வர சூரியின் கதாகோசம் (கஹாணய கோஸ) சிறந்த கதைத் தொகுப்பாகும். இவர் பதினொன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இதில் 36 கதைகள் உள்ளன. மஹேஸ்வரசூரியும் இதே காலத்தில் வாழ்ந்தவர். ணாண பஞ்சமீகஹா எனும் ஞான பஞ்சமி கதை நூல்படைத்துள்ளார். இந்நூலில், "பெண் பிறந்ததுமே சோகமும் பிறக்கிறது அவள் வளர வளரக் கவலையும் வளர்கிறது. திருமணம் செய்து வைத்த பின்னும் ஏதாவது தந்து கொண்டே இருக்க வேண்டும். பெண்களைப் பெற்ற தகப்பனுக்கு எப்போதும் கவலைதான்" என்று கூறப்பட்டுள்ளது.

பத்தாம் நூற்றாண்டில் கூறிய இதே நிலைதான் இருபதாம் நூற்றாண்டிலும் நம் நாட்டில் நிலவுகிறது.

தேவபத்ரசூரி எனப்படும் குண சந்திர கணி பதினோராம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர். இவர் 'கஹாரயணகோச' எனும் (கதாரத்னகோசம்) நூல் படைத்துள்ளார்.

பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த தேவ சந்திர சூரியின் 'காலிகா சார்ய கதை', மஹேந்திர சூரியின் 'நர்மதா சுந்தரி கதை',

பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த சோகபிரபசூரியின் 'குமாரபால பிரதிபோதம', மற்றும் பத்ம சந்திர சூரியின் சீடர் ஒருவர் தொகுத்த 'பிராகிருத கதாசங்கிரகம்' சுமதி சூரியின் 'ஜினதத்தாக்யானம்' முதலிய பல நூல்கள் இந்த நூற்றாண்டில் இயற்றப்பட்ட சிறப்பு மிக்கவை.

ஜினதத்தாக்யானம் கூறும் பொன்மொழிகள் இவை :

மாமியார் வீட்டில் இரண்டு மூன்று நாட்கள் சுவர்க்கமாகத் தோன்றும். பின்னர் அவமரியாதை என்னும் தீயால் எல்லாம் வெந்துபோகும்.

உச் ஆகா[3]மே வாஸோ
ஸேயம் வத்தம் ஸ கோ[3]ரஸா ஸாலீ
இட்டாய ஜஸ்ஸ ப[6]ஜ்ஜா
பியதம! கிம் தஸ்ஸ ரஜ்ஜேண?

"கரும்பு விளையும் ஊர், வெண்துகிலாடை, நெய், பாலும் செந்நெல்லும் உணவு, அன்புள்ள மனைவி, இவை இருந்தால் நண்பனே! அரசாட்சியலால் என்ன பயன்?"

இந்நூலில் வரும் சில புதிர்ப் பாடல்களும் விடுகதைகளும் சுவை மிக்கதாக அமைந்துள்ளன.

பதினான்காம் நூற்றாண்டில் ரத்ன சேகர சூரி, சிரிபாலகஹா எனும் ஸ்ரீபால கதையை இயற்றியுள்ளார். ஜினஹர்ஷகனி எனும் ஆசிரியர் ரயனஸேஹரீ கஹா எனும் ரத்ன சேகரீ கதை இயற்றி யுள்ளார்.

வீரதேவகனியின் மஹிவாலகஹா என்னும் (மஹீபால கதை) நூல் பதினாறாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. இதுபோன்றே அஞ்சனசுந்தரீ கதா, அந்தரங்க கதா, அனந்தகீர்த்தி கதா, ஜயசுந்தரீ கதா, பத்ம ஸ்ரீகதா முதலான பல நூல்கள் பிராகிருதத் தில் உள்ளன.

தர்மதாசகனியின் உபதேசமாலா, ஹரிபத்ரசூரியின் உபதேச பதம், ஜயசிம்ம சூரியின் தர்மோபதேச மாலா, மலதாரி ஹேம சந்திர சூரியின் சம்வேகரங்மமாலா, மகாகவி சிராவக ஆசடரின் 'விவேக மஞ்சரி' முனி சுந்தரசூரியின் 'உபதேச ரத்னாகரம்' போன்ற பல அறக்கருத்துக்களின் தொகை நூல்கள், பிராகிருதத்தில் மிகுந்துள்ளன.

பவபாவனா,

"ஆபத்து வருமுன்பே அதைக் கடக்கும் உபாயம் தேடிக்கொள்ள வேண்டும் : வீடு தீப்பற்றி எரியும் போது யாராவது கிணறு தோண்டுவார்களா?" எனக் கேட்கிறது.

உபதேசரத்னாகரம்,

"இனிமை, இனிப்பின்மை யாகிய மாற்றங்களில் நான்குவிதமாக மருந்து அமைவதுபோல, புத்த, ஜின, பாவணா, மித்யா தருமங்களும் அமைந்துள்ளன" என விளக்குகிறது.

மருந்து நால்வகைப்படும். முதலில் இனிப்பாக இருக்கும் இறுதியில் கசக்கும். முதலில் கசக்கும் இறுதியில் இனிக்கும். முதலிலும் முடிவிலும் இனிக்கும், முதலிலும் முடிவிலும் கசக்கும். இதுபோன்றே பௌத்த தருமமும், சமணமும், பிரபாவனா தருமமும், பொய்க்காட்சியுடைய தருமமும் ஆகும்.

பிராகிருதத்தில் இராமாயண, பாரதக் கதைகளும் தீர்த்தங்கரரின் வரலாறுகளும் இயற்றப்பட்டுள்ளன. வான்மீகி ராமாயணத்தைப் போலவே 'பஉமசரிய' எனும் பத்மசரிதம் சிறந்த காவியமாகும். கி.பி. மூன்று அல்லது நான்காம் நூற்றாண்டில் விமலசூரி என்பவர் இந்நூலை இயற்றினார். பத்ம என்பது இராமனது பெயர். இலக்குவன், பரதன், சத்துருக்கனன் பெயர்கள் அப்படியே உள்ளன. இராமனின் தாயார் பெயர் அப ராஜிதா கைகேயிக்குப் பரத சத்துருக்கனர் பிறந்தனர். சுமித்திரையின் மகன் இலக்குவன். இதுபோல, பல பெயர் மாற்றங்கள், உறவு மாற்றங்கள், நிகழ்ச்சி மாற்றங்கள், கதைப் போக்கில் மாற்றங்கள் உள்ளன. இராமாயண ஆராய்ச்சியாளர்கட்குச் சுவையான ஆய்வுக் கருத்துகள் இந்நூலில் கிடைக்கும், பதுமசரிதத்தைப் பின்பற்றிக் கன்னடம், சமஸ்கிருதம் முதலிய பிற மொழிகளிலும் பல சமண ராமாயணங்கள் தோன்றின. இந்நூல் குறித்துப் பின்னர் காண்போம்.

குணபாலமுனி இயற்றிய 'ஜம்பூசரிதம்' சிறந்த நூலாகும். இஃது பதினொன்றாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. மகாவீரருக்குப் பிறகு ஜம்பூஸ்வாமி என்னும் முனிவர் சுதர்மஸ்வாமி முனிவரிடம் ஜினதீட்சை பெற்று பரிநிர்வாண மடைந்தவர். இவரது சரிதம் இந்நூலில் கூறப்பட்டுள்ளது. இந்நூலில், வரும் அறிவுரைகளில் சில :

"மூங்கில் கழைமேலேறுகிறான், கைகளை மாசுபடுத்துகிறான். புழுதியில் புரளுகிறான். வயிற்றுப்பாட்டுக்காகத் தாழ்ந்த மனிதன் எதுதான் செய்யவில்லை?"

''ஜம் கல்லே காயவ்வம்
அஜ்ஜம் சிய தம் கரேஹ துரமாணா
ப³ஹுவிக்கோ⁴ ய முஹுத்தோ
மா அவரண்ஹம் படிக்கே ஹ''

நாளை செய்ய வேண்டியதை இன்றே விரைந்து செய்து விடுக! ஒவ்வொரு நாழிகையும் பல்வேறு தடைகளுடன் கூடியுள்ளது. ஆகையால் பிற்பகல் செய்யலாம் என்று எதிர்பார்க்காதே.''

சாது தனேஸ்வர் பதினொன்றாம் நூற்றாண்டில் 'சுரசுந்தரி சரிதம்' இயற்றியுள்ளார். இது பிராகிருத மொழியின் அழகு மிக்க காவியமாக மதிக்கப்படுகிறது. 250 பாடல்கள் கொண்ட 16 படலங்கள் உள்ள நூல் இது. சுரசுந்தரி மகரகேதுவை மணந்த காதல் கதை இது. இந்நூலில் வரும் ஒரு பாடல்,

'எதுவரை மனத்தில் ஆசை உருவாகவில்லையோ அதுவரை மேலான இன்பம் கிட்டும். ஆசையுள்ள மனத்தில் ஆயிரம் துன்பங்கள் புகுந்து விடும்' என நவில்கிறது. இது.

''யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்''
எனும் குறட்பாவுடன் ஒப்பு நோக்கத் தக்கது.

நேமிசந்திரர் ரயண சூடராய சரிய என்னும் (ரத்னசூடராஜ சரிதம்) அறக்கருத்துக்களை விளக்கும் காவியம் இயற்றியுள்ளார். பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த நேமிசந்திரர் உத்தராத்யாயனசூத்திரத்திற்கு உரை எழுதியவர். ஆக்யாண மணி கோசம் எனும் நூலும் இயற்றியுள்ளார். ரத்ன சூடராஜசரிதம் வசனநடையில் அமைந்த காவியம்.

கதாரத்ன கோசம் இயற்றிய குண சந்திர கனி பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். இவர் பார்சுவநாத சரிதம் எனும் காவியம் இயற்றியுள்ளார். மகாவீர சரிதம் எனும் காவியமும் நேமிசந்திரர் இயற்றியுள்ளார்.

ஹேமசந்திர சூரியின் சீடராகிய லட்சுமண கனி பன்னிரண் டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவர் சுபார்சுவநாத சரிதம் எனும் ஏழாம் தீர்த்தங்கரராகிய சுபார்சுவநாதரின் வரலாற்றைக் காவியமாகப் படைத்துள்ளார்.

பதிமூன்றாம் நூற்றாண்டில் தேவேந்திர சூரி சுதம்ஸணாசரிய எனும் சுதர்சனாசரிதம் இயற்றியுள்ளார். இவர் கண்ஹ சரிய

என்னும் கிருஷ்ண சரிதமும் இயற்றியுள்ளார். மானதுங்க சூரி ஜயந்தீ சரிதம் இயற்றியுள்ளார்.

இது போன்ற சரித காவியங்கள் பிராகிருதத்தில் பல உள்ளன.

## பிராகிருத இலக்கண நூல்கள்

சமஸ்கிருத மொழிக்குப் பாணினி போலவோ, தமிழுக்குத் தொல்காப்பியர் போலவோ, மிகச் சிறந்த இலக்கண நூலாசிரியர் பிறமொழிகளில் காண்பதரிது. எனினும் பிராகிருத மொழியிலும் பல இலக்கண ஆசிரியரைக் காண்கிறோம். பெரும்பாலும் வடமொழிச் சொற்கள் பிராகிருதமாகத் திரிபுறும் வகைமையை விளக்குவதாகவே இவர்களது பணி அமைந்துள்ளது.

கி.பி. நான்கு அல்லது ஆறாவது நூற்றாண்டினராகக் கருதப் படும் வரருசி இயற்றிய 'பிராகிருத பிரகாசம்' இன்று கிடைத்துள்ள தொன்மையான இலக்கண நூலாகும். மார்க்கண்டேய, பரத' கோஹல என்னும் மூன்று தொல்லாசிரியர்களைப் பற்றிக் குறிப் பிடினும் அவர்களது நூல்கள் கிட்டவில்லை. பிராகிருத பிரகா சத்தில் மாகதீ, மகாராஷ்ட்ரீ, பைசாசீ, ஸௌரசேனி ஆகிய நான்கு வகையான பிராகிருத வேறுபாடுகள் குறித்துக் குறிப்பிடப்பட் டுள்ளது.

இது சூத்திர உருவில் அமைந்த நூலாகும். இதற்கு ஆறாம் நூற்றாண்டினராகிய காத்யாயனர் 'பிராகிருதமஞ்சரீ' என்ற உரை வரைந்துள்ளார் ஏழாம் நூற்றாண்டில் பாமஹர் 'மனோரமா' எனும் உரை வரைந்துள்ளார். பதினான்காம் நூற்றாண்டில் வசந்த ராஜர், 'பிராகிருத சஞ்சீவனி' எனும் உரை வரைந்துள்ளார். மற்றும் பல உரைகள் உள்ளன.

சண்ட என்பவர் மூன்று அல்லது நான்காவது நூற்றாண்டில் 'பிராகிருத லக்ஷண' எனும் நூல் இயற்றியுள்ளார்.

லங்கேஸ்வர் என்பவர், 'பிராகிருத காமதேனு' எனும் சுருக்க மான இலக்கண நூல் இயற்றியுள்ளார். இந்நூலுக்குப் ''பிராகிருத லங்கேஸ்வர ராவண'' என்ற பெயரும் உண்டு. பன்னிரண்டாம் நூற்றாண்டில் கிரமதீஸ்வரர் 'சம்க்ஷிப்தசார' எனும் நூல் இயற்றி யுள்ளார். இதில் சமஸ்கிருதம், பிராகிருதம் இரண்டின் இலக்கணங் களும் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் வங்கத்தைச் சேர்ந்த புருஷோத்தமர், 'பிராகிருதானுசாசனம்' இயற்றியுள்ளார். வங்கத்

தைச் சேர்ந்தவரும் பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவருமான ராமசர்மா தர்க்கவாகீச பட்டாச்சாரியம் 'பிராகிருத கல்பதரு' என்னும் நூல் இயற்றியுள்ளார். ஓரியாவைச் சேர்ந்த மார்க்கண்டேய என்பவர் 'பிராகிருத சர்வஸ்வம்' இயற்றியுள்ளார்.

ஆசார்ய ஹேமசந்திரர் மிகப் புகழ் பெற்ற அறிஞர். பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். வடமொழி, பிராகிருதம் இரண்டிலும் பெரும்புலமை மிக்கவர். இவரது ''சித்த ஹேம சப்தானுவிசனம்'' எனும் நூல் சமஸ்கிருத பிராகிருத இலக்கண நூலாகும்.

பதின்மூன்றாம் நூற்றாண்டில் திரிவிக்கரமர் 'பிராகிருத சப்தானு சாசனம்' இயற்றியுள்ளார். பதினைந்தாம் நூற்றாண்டில் சிம்ஹராஜர் ''பிராகிருத ரூபாவதாரம்'' இயற்றியுள்ளார். ஆந்திர நாட்டைச் சார்ந்தவரும், சிறந்த அறிஞரும் ஆகிய லக்ஷ்மிதரர் 'ஷட்பாஷா சந்திரிகா' என்னும் இலக்கண நூல் வரைந்துள்ளார். பிராகிருதம், சௌரசேனி, மாகதீ, பைசாசீ, சூளி கா பைசாகீ, அபப்பிரம்சம் என்னும் ஆறு வகை பிராகிருதங்களின் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. பைசாச மொழி நாடுகளில் பாண்டிய நாட்டை யும் இவர் சேர்த்துள்ளார். சிங்கள நேபாள, குந்தள நாடுகளையும் பைசாச மொழி நாடுகளாகக் குறிப்பிட்டுள்ளார். இவை இந்நாட்டு அறிஞர் வழங்கிய பிராகிருதமே அன்றி மக்கள் மொழி என்று கருத முடியாது.

ஷட்பாஷ ரூப மாலிகா (துர்காசாரியார்) பிராகிருத வியாகரணம் (அரிகேசி) முதலான பல இலக்கண நூல்கள் உள்ளன எனத் தெரிகிறது.

தமிழகத்தைச் சார்ந்த ஆரணிக்கருகிலுள்ள அடையபலம் கிராமத்தில் பிறந்த பேரறிஞர் அப்பய தீக்ஷிதர். கி.பி. 1553-1636-இல் வாழ்ந்தவர். இலக்கிய, தத்துவத் துறைகளில் அவர் புகாத துறையே இல்லை. ''பிராகிருத மணிதீபம்'' எனும் பிராகிருத இலக்கண நூல் இயற்றியுள்ளார். இன்னும் பல இலக்கண நூல்கள் உள்ளன.

செய்யுளியல் நூல்கள் பல பிராகிருதத்தில் உள்ளன. 'விரஹாங்க' என்பவர் ஆறாம் நூற்றாண்டில் 'விருத்த ஜாதி சமுச்சய' என்ற செய்யுளியல் நூல் இயற்றியுள்ளார். நந்திதாட்யர் 'காஹாலக்கண' என்னும் (காதா லட்சணம்) நூல் பத்தாம் நூற்றாண்டில் இயற்றியுள்ளார்.

பதினான்காம் நூற்றாண்டில் ரத்னசேகரசூரி 'சந்தஸ்கோசம்' இயற்றியுள்ளார்.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் ''பிராகிருத பைங்கலம்'' எனும் தொகை நூல் செய்யுளியல் குறித்து தொகுக்கப்பட்டதாகக் கிடைக்கிறது. கவிதர்ப்பணம், சந்தஹ்கந்தளீ, சுயம்பூ சந்த முதலிய பல நூல்கள் உள்ளன.

சமஸ்கிருத மொழியில் அமர கோசம் போல, தமிழில் திவாகரம், சூடாமணி போல் பிராகிருதத்திய பாயிய லச்சீ நாம மாலா'' எனும் நிகண்டைப் பத்தாம் நூற்றாண்டில் தனபாலர் இயற்றியுள்ளார். இவர் தமது தங்கை சுந்தரீ என்பவர் கற்பதற்காக இதை இயற்றியதாகக் குறிப்பிட்டுள்ளார்.

பொருள் நூல், ஒளி நூல், சோதிடம் போன்ற பிற கலை நூல்களும் பிராகிருத மொழியில் இயற்றப்பட்டுள்ளன.

அசோகரது கல்வெட்டுக்கள், காரவேலனின் ஹாதிகும்பா கல்வெட்டுக்கள், வாஷிஷ்மீபுத்ர புலுமாயியின் நாசிக் கல்வெட்டுக்கள் பிராகிருத மொழியிலுள்ளவையாகும்.

சமண தீர்த்தங்கரர் வரலாற்றைக் கூறும் சரித காவியங்கள் பிராகிருத்தில் உள்ளது போலவே சமஸ்கிருதத்திலும் கன்னட மொழியிலும் உருவாகின. பிராகிருத மொழி கால ஓட்டத்தில். மேலும் திரிந்து அபப்பிரம்சம் என்னும் நிலையை அடைந்தது வடநாட்டில் முஸ்லீம் படையெடுப்புகள் நிகழ்ந்த காலத்தில் பாரசீக அரபு மொழி பேசும் மக்கள் வந்து கலந்தனர். மொகலாயர் வந்தனர். அதன் விளைவாக மேன் மேலும் பிராகிருதச் சொற்கள் உருமாறி அபப்பிரம்சம் எனும் நிலை பத்தாம் நூற்றாண்டுக்குப் பிறகு ஏற்பட்டது. அபப்பிரம்சத்திலும் பல சரிதகாவியங்கள் உருவாகின.

துதி தோத்திரப்பாக்களில் தனபாலரின் 'ருஷபபஞ்சாசிகா,' நந்திஷேணரின் 'அஜிதஸந்திதவ', தர்மவந்தனரின் 'பாஸஜினதவ', ஜின பத்மரின் 'ஸந்தி நாஹதவ', ஜினப்ரபசூரியின் 'பாஸநாஹ லஹுதவ' (பார்ஸ்வநாதலகுஸ்தவம்) மானதுங்கரின் 'பயஹரம்' முதலிய பல பாசுரங்கள் சிறப்பு மிக்கவை.

அபயதேவ சூரியின் ஒரு துதிப்பாடல்.

நீயே உடையவன், நீயே தாய்! தந்தை! நண்பனும்
குருவும் நீயே! கதியும் மதியும் நீயே!

இரட்சகன் நீயே! நலந்தருபவன் நீயே!
துயர்ச் சுமையால் நலிகின்றேன்.
நிர்ப்பாக்கிய வான்களின் அரசன் நான்
ஜினதேவனே!
உன் தாமரை போன்ற இணையடிகளே சரண்!
என்னை நல் வழியில் பாலிப்பாயாக!

## தொகை நூல்கள்

பிராகிருத மொழி இலக்கியத்துக்கு மணிமகுடமாகத் திகழ்வது 'காதாசப்த சதி' என்னும் தொகை நூலாகும். கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் ஹாலசாத வாஹனன் என்னும் மன்னன் தொகுத்த நூல் இது. இம்மன்னன் மரபு 'ஆந்திரபிருத்ய' மரபாகும். இவர்கள் பிரதிஷ்டானபுரம் எனும் நாசிக் அருகில் கோதாவரிக் கரையிலிருந்த நகரைத் தலைநகராகக் கொண்டு மகாராஷ்டிர, ஆந்திர மாநிலங்கள் உள்ள பகுதியை ஆண்டனர். சிலப்பதிகாரத்தில் கூறப்படும் 'நூற்றுவர் கன்னர்' என்பது இம்மன்னர் தாம். காதா சப்த சதி என்பது அகப்பாடல்கள் தொகுப்பாகும். காதா என்பது ஒருவகைச் செய்யுள் வடிவமாகும். சப்த சதி என்றால் எழுநூறு என்று பொருள். எழுநூறு பாக்கள் என்பதே பொருள்.

சங்க இலக்கியத்துக்குச் சமகால இலக்கியம் இது. சங்க இலக்கியங்களில் சிறந்த அக நானூறு, புற நானூறு, ஐங்குறுநூறு போலவே இந்நூலும் பாடல் அளவால் பெயர் பெற்றிருப்பது ஒப்பு நோக்கி மகிழத்தக்கது. முத்தொள்ளாயிரம் போலக் கவிதைச் சுவை மிக்க நூலாகும்.

சங்க இலக்கியத்துடன் ஒப்பிடத்தகுந்ததும், ஒப்பீட்டாய்வாளருக்கு உதவுவதுமான இந்நூலின் சிறப்பினைத் தமிழகம் நன்குணர்தல் வேண்டும். நம் சங்க கால அகப்பாடல்கட்கு இணை கூறத்தக்க ஒரே நூல் இது ஒன்றுதான். இந்நூலை நான் 1981இல் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளேன். நண்பர் இரா. மதிவாணனும் தமது நோக்கில் 'ஆந்திர நாட்டு அகநானூறு'' என்ற பெயரில் மொழியாக்கம் செய்து வெளியிட்டிருக்கிறார். சங்க இலக்கியத்துடன் காதாசப்த சதியை ஒப்பிட்டு ஒரு சில எம்.ஏ.,எம்.பில்., டாக்டர் பட்ட ஆய்வுகள் நடைபெற்றுள்ளன.

காதாசப்த சதி—தமிழ்ச் சங்க இலக்கிய பாதிப்பால் விளைந்த நூலாகச் சில ஆங்கில அறிஞரும் தமிழறிஞரும் கருதுவர். ஆனால் அது பொருந்துவதன்று. தமிழ்ச் சங்கப் பாடல்கள், இலட்சிய

வாழ்வின் படப்பிடிப்பாகும். மேலும் ஒரு சில இலக்கணவிதிகட்கு உட்பட்ட அமைப்புமாகும். ஐந்திணைப்பாகுபாடு, உள்ளுறை, இறைச்சிப் பொருள், திணை, துறைகள் முதலிய கட்டுக் கோப்புகள் தமிழில் உண்டு. காதா சப்த சதியில் இவை இல்லை. மேலும் தமிழில் குலமகள், பரத்தை என்ற இரு பிரிவினர் மட்டுமே தலைவி யருட் காண்கிறோம். ஆனால் காதாசப்த சதியில், வடமொழி இலக்கிய மரபில் காணும், சுவகீயா, பரகீயா, சாமான்யக எனும் குலமகள், பிறனை நாடுவோள், பரத்தை எனும் மூன்று வகைப் பெண்களையும் காண்கிறோம்.

இது தமிழ் மரபுக்கு ஒவ்வாத இலக்கிய மரபு என்பதில் ஐயமில்லை. குறிஞ்சி, முல்லை போன்ற குறியீடுகள் ஆங்கில்லை. ஆதலின் காதாசப்தசதி தமிழ்ச் சங்க இலக்கியத்தின் விளைவு என்பது சிறிதும் பொருந்தாது. அது ஆந்திர மகாராட்டிர மண்ணில் விளைந்த சுயமான படைப்பாகும். காதல், புணர்வு, ஊடல் முதலிய மன உணர்வுகள் உலகப் பொதுவானவை. அதன் விளைவே காதாசப்தசதி.

காதற் சுவையின் மனித மனத்தின் நுண்ணுணர்வுகள், அடிமன வேட்கைகள், முரண்போக்குகள், எல்லாவற்றையும் காதாசப்தசதி, நாகரிகமுடைய நயமான பாங்கில் எடுத்துக் காட்டுகிறது.

தமிழ் மரபில் காணப்படாத, சக்களத்தியர், மாமன், மாமி, விதவையர், சிற்றன்னை, அத்தை முதலிய உறவினரைப் பற்றியும், பல பாடல்கள் உள்ளன. சிறந்த நீதிக் கவிதைகளும் உள்ளன. காதாசப்தசதி, தொனிப்பொருள் மிகுந்த கவிதைக் களஞ்சிய மாகும்.

காதாசப்த சதியை நான் தமிழாக்கம் செய்து வெளியிட்டுள்ள தால் அது குறித்து விரிவாக ஈண்டுக் குறிப்பிடவில்லை. எனினும் ஒரு சில சுவைமிக்க கவிதைகள் மட்டும் தரப்பட்டுள்ளன.

எளிய குடிமகன் இழுத்துத் துவைத்திட
எவ்விதம் பொறுப்பேன் என்றே நைந்த
ஆடையது தான் கோடியிற் சொட்டும்
அழிதுளி யாலே அழுவது போலும்—சாலிவாஹனன் 1-18

''கோதுறு மனமுடைக் கொழுந்தனை நோக்கி
மாதவள் தினமும் போதனை செய்தாள்
இராம னுடன் செலும் இலக்குவன் சரிதம்
சுவரில் வரைந்த சுரரோவியத்தே.''
—சாலிவாஹனன் 1-35

பெருந்திருவிருந்தும் சிறிதும் பயன்படாது
அருந்திடாக் கருமி யாள னுக்கே
கோடை வெயில்சுடக் கொடுந்துயர் படூஉம்
வழிப் போக்கற்குத் தன் நிழலினைப் போன்றே
—குந்தபுத்திரன் 2-36

விரல்நெகிழ் விட்டு மேற்கண் கொண்டு
புனல் பருகிடும் வழிப் போக்கனைக் கண்டு
தண்ணீர்ப் பந்தலில் தங்கும் நங்கையும்
மெலிந்த நீரொழுக்கை மேலும் குறைத்தாள்
—பிராத்துமகன் 2-61

"எவரைப் பிரிந்தால் வாழ்ந்திட லரிதோ
அவர் பிழை செயினும் ஆற்றுதல் வேண்டும்
ஊரினைச் சுடினும் சூரழல் தன்னை
ஏற்ற முடனே போற்றார் உண்டோ?"
—ரேகா 2-63

தவணை நாள் கடப்பின் தவறாம் என்றே
அஞ்சிய தோழியர் ஆங்குள சுவரில்
எழுதிய கோடுகள் இரண்டு மூன்றினையே
அவளறி யாதே அழித்திடுகின்றார்
—புண்ய போஜன் 3-6

சுடுவெயிற் காற்றா தலைந்து மலையின்
கான்யா றென்றே கருதிப் பாந்தளை
எருமை நக்கிட அதன்வா யூறலை
கருங்கல் ஊற்றெனக் கருதிப் பருகும் —ஹாலன் 6-51

காதற் புதல்வனைப் பாதுகாக்க
கூரைத் துளைவழி கொட்டும் மழைநீர்
தன்தலை தடையாய் தடுக்கும் மடந்தை
தன் கண்ணீரால் தானே நனைப்ப
தோரா திருந்தாள்! பாரா யந்தோ—சாலி வாஹனன் 7-21

ஜம்ஜம் ஆலிஹஇ மணோ
ஆஸா வட்டீஹி ஹிஅஅப[2]ல அம்மி
தம்தம் பா[8]லோ வ்வ விஹீ
ணிஹ[-]அம் ஹஸிஊண பம்ஹ[-]ஸஇ

இதயப் பலகையில் எதைஎதைச் சித்தம்
ஆசைத் தூரிகையால் எழுதிற்றோ

அதையெலாம் சிரித்தவா றழித்திடும் அந்தோ
விதி எனும் இந்த விளையாட்டுப் பிள்ளை.
—சாலிவாஹனன் 7-56

இதுபோன்ற அற்புதமான கருத்தாழமும் கற்பனை வளமும் சுவைமிக்க கவித்துவமும் நாடகப் பாங்குமுடைய கவிதைகள் காதாசப்த சதியில் நிறைந்துள்ளன. செவிநுகர் அமுதக் கனிகள் இவை. சிந்தனை வளம் சான்ற செஞ்சொற் கவியின்பப் பூங்கா வாகும் காதா சப்த சதி. பிராகிருதமொழி தந்த உலகப் புகழ் பெற்ற நற்கொடையாகும்.

## வஜ்ஜாலக்கம்

பிராகிருத மொழியிலுள்ள மிகச் சிறந்த மற்றொரு தொகை நூல் வஜ்ஜாலக்கம். வஜ்ஜாலக்கம் என்ற சொல்லின் பொருள் முறைவைப்பு என்பதாகும். பத்[?]ததி என்ற சொல் வஜ்ஜா எனத் திரிந்துள்ளது. வஜ்ஜாலய என்ற பிரதிபேதமும் உண்டு. வைர நிலையம் என்று பொருள்படும். எனினும் வஜ்ஜாலக்கம் என்பதே பெருவழக்காகும்.

இந்நூலில் அறம், பொருள், இன்பம், வீடு குறித்த பல அழகிய கவிதைகள் தொகுக்கப்பட்டுள்ளன. இந்நூலைப் பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்த ஜயவல்லபன் எனும் சமணத் துறவி தொகுத்தளித்தார். சுவேதாம்பரசமணர் இவர். இவர் குறித்து வேறு செய்திகள் கிடைக்கவில்லை.

இந்நூலுக்கு ரத்னதேவர் எனும் சமணத்துறவி உரை வகுத்துள்ளார். கி.பி. 1337இல் உரை வரைந்ததாகத் தெரிகிறது. புகழ் மிக்க சமணத் துறவியும் அறிஞருமான ஹரிபத்ர சூரியின் சீடர் தருமசந்திரர் என்பவரின் வேண்டுகோளுக்கு இணங்க இந்த உரை இயற்றியதாக ரத்னதேவர் குறிப்பிட்டுள்ளார். இவ்வுரை புலமை சான்ற சிறந்த உரையாகும்.

வஜ்ஜாலக்கத்தில் காதாசப்த சதியிலிருந்து நூற்றைம்பது கவிதைகள் தொகுக்கப்பட்டுள்ளன. வஜ்ஜாலக்க நூலமைப்பு தனிச்சிறப்புடையது. இதில் வரும் கவிதைகளை ஐங்குறுநூறு போலப் பல தலைப்புகளில் தொகுத்துள்ளனர். ஐங்குறுநூற்றில் குரக்குப்பத்து, எருமைப்பத்து என்று வருவது போல இந்நூலும், சிங்கம், யானை, அன்னம் முதலிய பல தலைப்புகளில் பகுக்கப் பட்டுள்ளது. குறள், ஐங்குறுநூறு, பர்த்ருஹரி சுபாஷிதம் முதலிய

வற்றில் பத்துப்பத்துச் செய்யுட்கள் வரன்முறையாக அமைந்துள்ளது போல இந்நூலில் இல்லை. சில தலைப்புகளில் ஐந்தாறு செய்யுட்கள் உள்ளன. சிலவற்றில் இருபது இருபத்தைந்து கூட உள்ளன. சிங்கம் என்ற தலைப்பில் சிங்கத்தை உவமையாக்கிய கவிதைகள் தொகுக்கப்பட்டுள்ளன. யானை என்ற தலைப்பில் யானை உவமையாக வரும் கவிதைகள் தொகுக்கப்பட்டுள்ளன. படைவீரன் என்ற தலைப்பில் படைவீரர் குறித்த கவிதைகள் தொகுக்கப்பட்டுள்ளன. இந்தத் தொகுப்பு முறையினால் சுவைஞர்க்குப் பெருவிருந்தாய நல்ல கவிதைகளை ஒரேயிடத்தில் காணமுடிகிறது. அன்பு, அறம் முதலிய உயர் பண்புகளைத் தலைப்பாகக் கொண்டும் கவிதைகள் தொகுக்கப்பட்டுள்ளன.

இந்நூலில் 795 பாகதக் கவிதைகள் தொகுக்கப்பட்டுள்ளன. செருகுகவிகள் பல சேர்ந்து விட்டன. அவையும் சேர்ந்து 889 கவிதைகள் உள்ளன. செருகு கவிகள் கூறியது கூறலாகவும், தெளிவின்றியும் பொருத்தமற்றும் உள்ளன.

இந்நூலை நான் தமிழாக்கம் செய்துள்ளேன். வஜ்ஜாலக்கத்தில் முதலில் கவிதைத் திறனாய்வுடன் தொடங்கி, பின் நல்லோர், தீயோர் இயல்புகளையும் நட்பு, அன்பு, தைரியம், ஆள்வினைத் திறன், ஊழ் முதலிய தலைப்புகளில் அறம் சார்ந்த பண்புகளைப் பற்றிய சிறந்த கவிதைகளும் தொகுக்கப்பட்டுள்ளன. பின் வறுமை, தலைவர், தொண்டர் முறைகள், படைவீரம் முதலிய பொருட்களைச் சார்ந்த கருத்துகள் தொகுக்கப்பட்டுள்ளன. பின் உவமைப் பொருட்களைக் கொண்டு அறம் உரைக்கப்படுகிறது. எருது, மான், மல்லிகை, சுரும்பு, அன்னம், திங்கள் முதலிய பொருட்கள் மூலம் உவமையாலும், தற்குறிப்பேற்றம் மூலமும், தொனிப்பொருள் மூலமும் அறம் உரைக்கப்படுகிறது. பின்னர், எழில், கலவி, காதல், பிரிவு, விரகம், மன்மதன், காதலரன்பு, தூது, காதல் நோய், பயணி, கற்புடை மகளிர் முதலியவற்றில் இன்பத்துப்பால் குறித்த கவிதைகள் தொகுக்கப்பட்டுள்ளன. சோதிடர், எழுத்தர், மருத்துவர், பூசாரி, கரும்பாலை ஓட்டுநர், கிணறு தோண்டுவோர் ஆகியோர் தொழில் அடிப்படையில் மறைபொருளாகக் காமச்சுவை சார்ந்த இடக்குப் பேச்சுக்கள் பேசும் கவிதைகள், சமுதாயத்தில் காணும் நடப்பியல் சார்ந்த வகையில் தொகுக்கப்பட்டுள்ளன.

பின்னர் கண்ணன், சிவன் முதலிய தெய்வங்களைப் பற்றியும், புதிர்ச் செய்யுட்களும் இளவேனில், கார், பனி, ஆகிய பருவ காலங்கள் குறித்த கவிதைகளும் தொகுக்கப்பட்டுள்ளன. பின், மீண்டும் முதுமை, பெண்கள், முன்வினைப் பயன், பண்பாடு, குண நலன்கள் குறித்த அறம் சார்ந்த கவிதைகளும், தாமரை, அன்றில், ஆலமரம், பனைமரம், கடல், ஞாயிறு ஆகிய பொருட்களைச் சார்ந்து அறநெறிகளும் உரைக்கப்படுகின்றன. இறுதியில் நூற் பயன் கவிதைகளுடன் நூல் முடிவுறுகிறது. வஜ்ஜாலக்கத்தில் மேலோங்கி நிற்கும் உணர்வு அறஉணர்வும் காதலுணர்வுமாகும். இந்நூலிலுள் சில சிறந்த கவிதைகள் :

> "ஸவ்வஸ்ஸ ஏஹ பயஇ,
> பியம்மி உப்பாஇஏ பியம்காஉம்
> ஸுயணஸ்ஸ ஏஹ பயஇ
> அகஏ வி பிஏ பியம் காஉம்"

> "நல்லது செய்தவர்கட்கு நல்லது செய்வது
> எல்லோருடைய இயல்பாகும்.
> தீயனசெய் தார்க்கும் நல்லனவே செய்தல்
> சான்றோர் இயல்பாகும்". (39)

நற்பண்புடையவர்கள் தம் பண்பினாலும், செல்வந்தர்கள் தம் செல்வச் செழிப்பாலும் செருக்குறுவதில் பொருளிருக்கிறது. ஆனால் கயவர்கள் தம் குற்றங்களினாலேயே செருக்குறுவது வியப்புக்குரியதாகும். (55)

புணர்ச்சி (மெய்தொட்டுப் பழகுதல்) இன்றியும் காட்சியி னாலேயே இன்பம் பயப்பது தூய அன்பாகும். எட்டாத தூரத்தி லுள்ள சந்திரன் குமுத மலருக்கு இன்பம் ஊட்டுகிறான். (78)

இருந்தாலும், இல்லாவிட்டாலும் பிறர் குற்றங்களைத் தூற்றித் திரிவதனால் என்ன பயன் உண்டு? பொருளோ புகழோ கிடைக்காது. மேலும் பகைமைதான் உண்டாகும். (82)

தொடங்கிய வினையை இடையே தளர விடுபவனைப் பார்த்து, பிறரைப் போன்றே தன் உடலில் அமைந்த ஐம்பெரும் பூதங்களும் நகும். (93)

தேவர்கள் பாற்கடலைக் கடைந்தபோது, முன்வினைப் பயனால், இருவர் இருந்தும், சிவனுக்குக் கிடைத்ததோ ஆலகால விஷம், விஷ்ணுவுக்குக் கிடைத்ததோ அழகிய திருமகள். (131)

வறுமையே! உனக்கு வணக்கம். உன் அருளால் அற்புதமான சித்தி கிடைத்துள்ளது. எல்லா உலகையும் நான் பார்க்கிறேன். ஆனால் என்னை உலகம் பார்க்கவில்லை. (139)

ஒரு வீரச் சுவை மிக்க கவிதை :

''பக்கானிலேன பஹுுணோ விரமஉ
முச்சத்தி பாஸ படியேண
கி[3]த்த[4]ந்த கட்ட[4]ணம் து[3]ஸஹம் ஏ
ஸாஹிஜ்ஜஇ ப[4]டே[4]ண. (177)

இறக்கைகளின் காற்றுப்பட்டு, தன்னருகே வீழ்ந்துபட்ட தலைவனின் மூர்ச்சை தெளியட்டும் என்பதற்காக, கழுகு தன் குடலைப் பிடுங்கித் தின்னும் தாங்கரிய துன்பத்தைப் படைவீரன் சகித்துக் கொள்கிறான்.

சில உவமைக் கவிதைகள் :

''திங்கள் வளர்கிறது. தேய்கிறது. ஆனால் விண்மீன்களுக்கு ஒன்றும் நேர்வதில்லை. பெரியோர்கட்குத்தான் உயர்வதும் தாழ்வதும் அமையுமன்றிச் சாதாரண மக்கட்கு ஒன்றுமில்லை. (267)

ஈரமிருந்தால் மட்டுமே பூமாலை மணம் வீசும். சந்தனமோ காய்ந்தாலும் தேய்ந்தாலும் கூடத் தனிமணம் வீசும். (728)

நிழலற்ற, இருக்க இடம் தராத, கைக்கெட்டாத தூரத்தில் பழம் இருக்கும் பனைமரமே! நீ உயர வளர்ந்தும் என்ன பயன்? [பனைமரம் கருமிக்கு உவமை] (738)

விளக்குச் சுடரே! இருளை விழுங்கிப் பின் மை என்னும் சாக்கில் அதனை உமிழ்கின்றாய்! அல்லது தூய இயல்பினர் இதயத்தில் மாசுகள் தங்காது என்று எடுத்துக் காட்டுகிறாய். (776)

ஒரு சில காதற் கவிதைகள் :

மெல்லியல் நங்கையின் அலைபோன்ற சுருண்ட குழல், பிரம்ம தேவன் அழகைச் செறித்து அழுத்திய போதுண்டான விரல்களின் சுவடு போலத் தோன்றுகிறது. (314)

கண்கள் மூலம் காதல் பார்வை கொல்வதுபோல வாய்நிறைய நூறுபலம் நஞ்சினைத் தின்றால் கூடக் கொல்வதில்லை. (335) [பலம் - ஓர் எடை அளவு]

கடவுளே! என்பால் அருள் இருந்தால் மனித உலகில் பிறவியைத் தராதே! அப்படியே தந்தாலும் காதலைத் தராதே! அப்படியே தந்தாலும் பிரிவினைத் தராதே. (349 A)

பாதரசம் நூறு துண்டுகளானாலும் மீண்டும் ஒன்று கூடிவிடும் தகைய காதல் வேறு. எனது காதலோ முத்துப் போன்றது. உடைந்தால் மீண்டும் இணையாது. (349 B)

எந்தக் கண்களால் அவன் எழில் நலம் காணப்பட்டதோ அந்தக் கண்கள் மட்டும் அழட்டும். அவனுடலைத் தொட்டனுபவிக்காத உடல் உறுப்புக்கள் ஏன் மெலிந்து தேயவேண்டும்? (389)

ஓ! கொடியவனே! மன்மதா! என்மேல்தான் ஐந்து பாணங்களும் போட்டுவிட்டாயே! இனி மற்ற பெண்களை மீண்டும் எப்படி வில்லை மட்டும் வைத்துக் கொண்டு கொல்கிறாய். (392)

வஜ்ஜாலக்கத்தில் இதுபோன்ற சுவைமிக்க பாடல்கள் மிகுதியாக உள்ளன. பிராகிருத இலக்கியத்தில் சிறப்பிடம் பெறும் வஜ்ஜாலக்கத்தில் உள்ள கருத்துகள், கவிதை நயங்கள் தமிழ் இலக்கியத்துடன் ஒப்பிட்டு மகிழ்வது சுவைஞர்கட்கு விருந்தாக அமையும்.

## காதா சஹஸ்ரீ

சகல சந்திரகணி எனும் சமணத் துறவியின் சீடர் சமய சுந்தர கணி என்பவர், கி.பி. 1626இல் பல்வேறு துறைகளைச் சார்ந்த செய்திகளையும், பொன்மொழிகளையும் தொகுத்து காதா சஹஸ்ரீ என்ற நூல் படைத்தளித்துள்ளார். ஆயிரம் செய்யுட்கள் உடைய தொகுப்பு இது. இதில், சமணத் துறவிகள் ஒழுக்க நெறிகள், சோதிடம், மருத்துவம் போன்ற பிறதுறைச் செய்யுட்களுடன் மகாபாரதம் முதலிய இலக்கிய நூல்களிலுள்ள கவிதைகளும் தொகுக்கப்பட்டுள்ளன.

## சேது பந்தம்

பிராகிருத மொழியின் மாபெரும் காவியம் சேதுபந்தம் ஆகும். மகாகவி பிரவரசேனன் இந்நூலை இயற்றிய கவிஞராவார். ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். காளிதாசன் சமகாலத்தவர் என்பர். கற்பனை வளமும் கவிதைச் சிறப்புமிக்க மாபெரும் காவியம். இராமாயண யுத்தகாண்டக் கதையை விவரிக்கிறது. இராமன் தன் படைகளுடன் இலங்கை செல்லப் பாலம் கட்டிய வரலாற்றுடன் இக்காவியம் தொடங்குகிறது. சேதுபந்தம்

என்றால் அணைகட்டுதல் என்று பொருள்படும். குரங்குகள் மலைகளையும் பாறைகளையும் கொணர்ந்து தர, நளன் பாலம் கட்டியது விரிவாக வருணிக்கப்பட்டுள்ளது. தசமுகவதம் என்றொரு பெயரும் இக்காவியத்துக்கு உண்டு. சேதுபந்தம் பதினைந்து ஆஸ்வாஸகங்கள் [சருக்கங்கள்] உடைய மாகாவியமாகும்.

முதல் படலத்தில் இலங்கையிலிருந்து அனுமன் திரும்பி வருவதும் சீதையைப் பற்றிக் கூறுவதும் வானரப்படை கடற்கரைக்கு வருவதும் வருணிக்கப்படுகின்றன.

இரண்டாம் படலத்தில் வானரர்கள் கடலைக் கண்டு மலைத்து நிற்பது விரிவாக வருணிக்கப்பட்டுள்ளது.

மூன்றாம் படலத்தில் சுக்கிரீவன் வானரப்படைகளை நோக்கி வீரமொழிகள் பேசுவது கூறப்படுகிறது.

நான்காம் படலத்தில் ஜாம்பவான் ஆலோசனை கூறுவதும் வீபீஷணன் சரணாகதியும் விளக்கப்படுகின்றன.

ஐந்தாம் படலத்தில் இராமன் நோற்று வருணனை வேண்டுதலும், கடலை நோக்கி வெகுண்டு அம்புவிட முனைவதும் வருணிக்கப்படுகின்றன.

ஆறாம்படலத்தில் வருணனுக்கும் இராமனுக்கும் நடந்த உரையாடலும் வருணன் பாலம் கட்டுமாறு அறிவுரை கூறுவதும் கூறப்பட்டுள்ளன.

ஏழாம் படலத்தில் அணைகட்டுதல் வருணிக்கப்படுகிறது.

எட்டாம் படலத்தில் நளன் அணைகட்டும் திறன் கூறப்படுகிறது. இராவணனிடம் அணைகட்டும் செய்தி தெரிவிக்கப்படுகிறது.

ஒன்பதாம் படலத்தில் வானரர் கடல் கடந்து இலங்கை அடைதல் கூறப்படுகிறது.

பத்தாம் படலத்தில் மாலைக்காட்சி வருணனை காணப்படுகிறது.

பதினொன்றாம் படலத்தில் சீதையின் துயரக் காட்சியும் மாயையால் இராமன் தலையைக் காட்டி அரக்கியர் வெருட்டுவதும் வருணிக்கப்பட்டுள்ளன. திரிசடை ஆற்றுவிக்கிறாள்.

பன்னிரண்டாம் படலத்தில் காலைக் காட்சி வருணிக்கப்படுகிறது. இராமன் வில் எடுத்தலும், வானரர்கள் இலங்கையை முற்றுகையிடலும், கோட்டைக்கதவுகள் மூடப் படுவதும் வருணிக்கப்பட்டுள்ளன.

பதிமூன்றாம் படலத்தில் போர்க்களக் காட்சி வருணிக்கப்படு கிறது. சுக்கிரீவனுடன் பிரஜங்கனும், நளனுடன் தபனனும், அனுமனுடன் ஜம்புமாலியும் அங்கதனுடன் இந்திரஜித்தும் போர் புரிகின்றனர்.

பதினான்காம் படலத்தில், இராமன் போர் புரிதலும் இந்திரஜித்தின் மாயப்போரும், நாகபாசத்தால் இலக்குவன் மயக்க முறுதலும், வீடணன் மூலம் தெளிவுற்ற இராமன் கருடனைத் துதித்தலும் கருடன் வர நாகபாசம் விலகலும் வருணிக்கப்படுகின்றன. அனுமன் அகம்பனனைக் கொல்கிறான். பிரஹஸ்தனுக்கும் நீலனுக்கும் போர் நடக்கிறது.

பதினைந்தாம் படலத்தில் பிரஹஸ்தன் மறைதலும் இராவணன் போருக்கு வருவதும், இராமன் போர் புரிவதும், இராவணன் தன் நகர் திரும்புவதும் கும்பகருணனை எழுப்பிப் போருக்கு அனுப்பி வைத்தலும், கும்பகருணனைக் கண்டு வானரர் அஞ்சுதலும் இராமன் கும்பகருணனைக் கொல்வதும் வருணிக்கப் படுகின்றன. இந்திரஜித் போரிட வருவதும், இலக்குவனால் கொல்லப்படுதலும் இராவணன் இராமனுடன் நேருக்கு நேராகப் போரிடலும் இராவணன் கொல்லப்படுதலும் விபீஷணன் வருந்து வதும் தன் சகோதர்கட்கு இறுதிக்கடன் ஆற்றுவதும், சீதை தீக்குளித்தலும் இராமன் அயோத்திக்கு மீள்வதும் வருணிக்கப் படுகின்றன.

பதினைந்து ஆசுவாசங்களில் (படலங்களில்) இராமாயண யுத்த காண்டப் பகுதியைக் கவிநயத்துடனும் வருணனைத் திறனுடனும் இப்பெருங்காவியம் சுவையுடன் விளக்குகிறது. 1291 செய்யுட்கள் உள்ளன. இரண்டாவது படலம் நாற்பத்தாறு சுலோகங்கள் உள்ளது. மற்றவை அறுபதுக்குமேல் நூறுக்குட்பட்ட சுலோகங் கள் உடையவை. எட்டாவதில் நூற்றேழு சுலோகங்களும் பதினொன்றாவதில் நூற்று முப்பத்தேழு சுலோகங்களும் அமைந் துள்ளன. இந்நூலுக்குக் கிருஷ்ண விப்பிரர், மாதவயஜ்வின், முதமல்லபட்டர், கிருஷ்ணதாசர், தேவராதர், ராமதிருஷ்டி, குலநாதர், ராமதாசர், லடதனமிஸ்ரா, ஸ்ரீனிவாசர், லோகநாதன், சாஹசாங்கர், ஹர்ஷபாலர் ஆகிய பலர் உரை வரைந்துள்ளனர்.

சேதுபந்தத்தில் பிரவரசேனன் சில இடங்களில் வான்மீகத் துடன் முரண்பட்டுமுள்ளார். இராவணன் தலைகள் ஒரே அம்பில் வீழ்த்தப்பட்டதாக வருணிக்கிறார். வான்மீகத்தில் கிஷ்கிந்தை யிலிருந்து வானரசேனை புறப்பட்டதாக உள்ளது. பிரவர

சேனன் விந்தியமலை, சஹ்ய பருவதம் வந்து மலயமலை (பொதிகை) வந்த பின் கடற்கரைக்குச் செல்வதாக வருணிக்கிறார். மலயமலை தமிழ் நாட்டைச் சேர்ந்ததாகும். மலை என்ற சொல் தமிழ்ச்சொல் என்பதும் அதிலிருந்தே மலயம் என்ற வடசொல் உருவானது என்பதும் அறிஞர் ஏற்றுக்கொண்ட ஒன்றாகும்.

பிரவரசேனன்—நடராஜரைத் துதித்துள்ள சுலோகம் தமிழக, சைவ மரபின் தாக்கம் என்று அறிஞர் கூறுவர்.

சேதுபந்தம்—முதிர்நடையுடைய காவியம் இதிலிருந்து சில கவிதைகள் காண்போம். அரக்கியர், இராவணன் இராமனைக் கொன்றுவிட்டதாகக் பொய்த்தோற்றம் காட்டி, வெட்டுண்ட இராமன் தலை என்று ஒன்றைச் சீதை முன் காட்டுகின்றனர். அப்போது சீதை,

''மண்மகள் பல கணவரை அடைபவள்
அரசு ஆகிய திருமகளும் ஓரிடத்தில்
நிலையற்றுச் செல்பவள் தான்
ஆனால் நான் எவ்விதம் தாங்கரிய
கைம்மை நோன்பினை மேற்கொள் வேன்.
(நிச்சயம் உடன் இறந்துபடுவேன்'')

என்று புலம்புகிறாள்.

திருமாலாகிய இராமனுக்கு மண்மகள் (பூதேவி, திருமகள், ஸ்ரீதேவி)—சீதை ஆகிய மூவருமே மூன்று அவதார நிலைகளில் மனைவியர் தாம். நாடும் செல்வமும்—பலர் கைப்படும். நானோ குலமகள்—கணவனில்லாவிட்டால் இறப்பேன் என்று கூறியதாகக் கருத்து.

இராமன், இராவணனைக் கண்டு போரிடும்போது கூறியதாக அமைந்த கவிதை

''பு[3] அணிவ்வாலிஅ கட்டி[4]அ கு[3]டி அக்
கேக்கவி விஸரந்த பவ்வித்[4]த[4]ஸிரம்
ணிப்பல ஸீதா ஸந்தி[4] அணக்குக்குடி[4]அ
ஹி அஅம் கரோமி த ஹமுஹம் (14—54)

''தோள்களால் சூழப்பட்டுள்ள, வளர்கின்ற தலைகளை ஒவ்வொன்றாகக் கீழே பிடுங்கி எறிந்துவிட்டு, சீதையைச் சிறை வைத்துள்ள இதயத்தை நகத்தால் பிளந்து வெளிக் கொணர்வேன்''.

கம்பன் காவியத்தில், மண்டோதரி

"கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
மனச் சிறையில் கரந்த காதல்
உள்ளிருக்கும் எனக்கருதி உடல்புகுந்து
தடவியதோ ஒருவன் வாளி?"

என்று கூறுவதாக உள்ள கற்பனை நயத்தை இக் கவிதையுடன் ஒப்பிட்டுச் சுவைக்கலாம்.

சுக்கிரீவன் வானரப் படையை நோக்கி,

"நீங்கள் தான் இக்காரியத்தை மேற்கொண்டு நிறைவேற்ற வேண்டும். தலைவர்கள் கட்டளை இடும் சொற்கள் மட்டுமே கூறுவர். ஞாயிற்றின் கதிர்கள் பட்டதுமே தாமரைப் பொய்கையில் மலர்கள் தாமாகவே விரிவதுபோல நீங்கள் செயற்பட வேண்டும். (3—6)

[ஞாயிறு தலைவனுக்கு உவமை. அதன் கதிர் கட்டளையிடும் சொற்கள், தாமாக விரியும் மலர்கள் தாமே செயலாற்றும் தொண்டர்]

என்பதும்,

"சொற்கள் இன்றிச் செயலில் செய்து காட்டும் நல்லோர் அரிதாக உள்ளனர். பூப்பது தெரியாது கனிதரும் மரங்கள் கூட சில உண்டு".

"வானம் என்கின்ற கடலில் தூய கதிர்களை உடைய முத்துக்கள் எனும் விண்மீன்கள் இரவு எனும் கடற்கரையில் எழிலுடன் பிரகாசித்தன. பிளந்த முத்துச் சிப்பிகளாக மேகங்கள் திகழ்ந்தன". (1—22)

"மாருதி மகிழ்ச்சி நிறைந்த கண்களோடு கூடிய முகபாவத்தால் சீதையின் நிலையை முதலிலேயே கூறிப் பின்னர் சொற்களால் முழுவதும் கூறினான்."

என்பனவும் பிற சில சான்றுகள்.

சேதுபந்தம்—முதிர்ச்சியுடைய சொல் நடையில் அமைந்த மாகாவியம். உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம் அனைத்தும் காவியப் பயிற்சி மிக்கவர் துய்க்கும் வண்ணம் மிடுக்கான நடையில் அமைந்துள்ளன. இக்காவியம் இந்திய இலக்கியத்தில் சிறப்பிடம் பெற்றுள்ளது என்பதில் ஐயமில்லை.

## கௌடவதம்

பிராகிருத மொழியிலுள்ள மிகச் சிறந்த மற்றொரு காவியம் கௌடவதம் என்பதாகும். இந்நூல் கௌடம் என்பது வங்க நாட்டினைக் குறிக்கும். வங்காள மன்னனை மாளவநாட்டு மன்னன் யசோவருபன் போர் புரிந்து வென்ற வரலாற்றுச் செய்தி இந்நூலில் வருணிக்கப்பட்டுள்ளது.

யசோவருமன் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் மாளவத்தை ஆண்ட மன்னன். இம்மன்னனின் அவைப் புலவனாகிய வாக்பதி ராஜா இக்காவியத்தை இயற்றியுள்ளான். வாக்பதி ராஜா குறுநில மன்னனாகவும் திகழ்ந்தவன். இந்நூலில் 1206 செய்யுட்கள் உள்ளன. கடவுள் வாழ்த்து, கவிப்புகழ், காவியாரம்பம், மலைக் காற்று, எதிரிகள் மனைவியர் துயரம், படைகள் வெற்றி, மன்னனைக் கவிஞர் புகழ்தல், காடு, கோடைக்காலம், கடல் முதலிய வருணனைகள் உள்ள இக்காவியம் சுவைமிக்க கவிதை களால் நிரம்பியுள்ளது.

கவிச்சித்திரங்களும் கற்பனைவளமும் மிகுந்துள்ள இந்நூலில், படைவீரர் இயல்பு, வீரக்காட்சிகள், இயற்கை வருணனைகள், பெண்டிர் இயல்பு முதலியவை சிறப்பாக வருணிக்கப்பட்டுள்ளன. உவமைக்குக் காளிதாசனைப் போல, தற்குறிப்பேற்றம் அணிக்கு வாக்பதி ராஜன் சிறந்தவன் என்பது இலக்கியத் திறனாய்வாளரின் கருத்தாகும். இந்நூலை 1887இல் எஸ். பி. பண்டிட் முதலில் வெளியிட்டார். ஹரிபாலர் வடமொழியில் உரை வரைந்துள்ளார். இதில் உள்ள ஒரு கவிதை,

> ''மஞ்சள் பூசிய தமிழ்ப் பெண்களின் கன்னங்கள் போல, நன்றாகப் பழுக்காத (செங்காயாக உள்ள) மாங்கனிகள் மரத்தில் தொங்குகின்றன'.

என மாம்பழங்களுக்கு ஒப்பு காட்டுகிறது.

### சுவை மிக்க சில கவிதைகள்

''பிரளய வெள்ளத்தில் நிறைந்துள்ள உலகமே சந்திரமண்டல மாகத் தோன்ற, அதிலுள்ள மான்மறுப்போலத் திகழும் திருமால் வெல்க!''

''தலைமேலுள்ள சந்திரனின் ஒளிக்கற்றைகளால் தலையின் நிழல் கழுத்தில் தோன்றுவது போலுள்ள சிவனுடைய நஞ்சுண்ட கண்டம் வெல்க,''

(38)

இன்பத்தின் மிகுதிக் கேற்பவே துன்பமும் கடுமையாக அமைகிறது. ஒளி மிகுதிக்கேற்பவே நிழலும் அமைகிறது. (936)

செல்வம் இழந்தவனைத் தன் காதலி கூடப் புறக்கணித்து ஒதுக்குவாள்! முழுமையற்ற தேய்ந்த நிலாவினை இரவுப் பெண் வெளியேற்றுகிறாள் அல்லவா? (953)

இரவு என்ற பெண் இருட்டு எனும் பஞ்சரைக்கும் இருப்பு யந்திரத்தில் பருத்தியைப் போடவே, விடியல் எனும் பஞ்சு முன்பும் (கீழ்த்திசை) விதைகளாகிய கிரகங்கள் பின்பும் (மேற்கே) பிரிந்து குவிந்தன. (1173)

மந்த புத்தியுள்ளவர்கள் மனிதரிடம் இல்லாத குறைகளையும் ஏற்றிக் காண்பர். வானத்தில் நீலம் இல்லை. அது கண்ணொளி யின் செயற் பாட்டால் தோன்றும் பொய்த் தோற்றமேயாகும். (85A)

**சில கருத்துக்கள்**

மந்த புத்தியுடையவர்களுக்கு அறிவொளி மந்தமாகவே பிரகாசிக்கும். நீலமணியில் பட்ட சூரிய ஒளி நீலமாகவே தோன்றும். (905)

பொறாமை இருக்கும்போது விவேகம் தெளிவாகப் புலப் படாது. புகை மண்டியபோது நெருப்பு ஒளிர்வதில்லை. (896)

''துங்காவலோகனே ப⁴வதி விஸ்மயோ
நீச த³ர்சனே சங்கா
யதா ப்ரேக்ஷமாணானாம் கி³ரிம்
யதைவ அவடம் பஸ்யதாம்.'' (897)

மேலோரைக் காணும் போது வியப்பும் கயவரைக் காணும் போது ஐயப்பாடும் தோன்றுகிறது. மலையைக் காணும் போது வியப்பும் பள்ளத்தைக் காணும் போது ஐயமும் ஏற்படுகிறதைப் போலத்தான்.

கௌடவதம்—கருத்துக் களஞ்சியம். கற்பனைவளமும் சிந்தனைக்கு விருந்தாய உயர்ந்த கருத்துக்களும் நிறைந்த சிறந்த காவியமாகும்.

## மதுமத விஜயம்

வாக்பதி ராஜனின் மற்றொரு காவியம் மதுமத விஜயம். இக்காவியம் தற்போது கிட்டவில்லை. எனினும் அபிநவகுப்தர், ஹேம சந்திரர் போன்றோர் இந்நூலைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். வாக்பதி ராஜனும் தனது கௌடவதத்தில் குறிப்பிட்டுள்ளான்.

## ஹரி விஜயம்

கருவசேனன் எனும் கவிஞர் எட்டாம் நூற்றாண்டில் இயற்றிய காவியம் ஹரிவிஜயம். இந்நூலும் தற்போது கிடைக்கவில்லை. ஹேமசந்திரர், ஆனந்தவர்த்தனர், போஜன் முதலிய மாபெரும் கவிஞர் இந்நூலைக் குறிப்பிடுவதால் இக்காவியம் சிறந்த படைப்பாக இருந்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

## விஷமபாணலீலா

புகழ்பெற்ற மாபெரும் கவிஞரும் விமரிசகருமான ஒன்பதாம் நூற்றாண்டைச்சார்ந்த ஆனந்தவர்த்தனர் இயற்றிய பிராகிருத மொழிக் காவியம் விஷமபாணலீலா. தொன்யாலோகம் எனும் சிறந்த நூல் படைத்துப் புகழ் பெற்றவர் ஆனந்தவர்த்தனர். தம் நூலில் இக்காவியம் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். ஹேமசந்திரரும் குறிப்பிட்டுள்ளார். ஹேமசந்திரர் கி.பி. 1088—1173இல் வாழ்ந்த சமணமதத்தைச் சேர்ந்த பேரறிஞர். விஷமபாணலீலாவும் தற்போது கிடைக்கவில்லை.

## லீலாவதீ

பிராகிருத மொழியிலுள்ள மற்றொரு காதற் காவியம் லீலாவதீ ஆகும். பூஷணபட்டரின் குமாரர் கோஊஹல என்பவர் இயற்றியதாகும். பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்தவர். தம் மனைவியின் விருப்பத்திற்கேற்ப இக்காவியம் படைத்தார். இந்நூலைப் பேராசிரியர் ஏ. என். உபாத்யே, சிந்தீஜைனகிரந்தமாலா சார்பில் பம்பாயில் 1941ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளார்.

பிரதிஷ்டானபுரத்தைச் சேர்ந்த சாதவாஹன மன்னன் சிங்கள ராஜகுமாரியாகிய லீலாவதியைக் காதலித்து மணம் புரிந்த கதை இக்காவியக் கருப்பொருளாகும். இந்நூலுக்குப் பதின்மூன்றாம் நூற்றாண்டில் குஜராத்தைச் சேர்ந்த பெயர் தெரியாத சுவேதாம்பர சமணர் ஒருவர் சமஸ்கிருதத்தில் உரை வரைந்துள்ளார்,

சிங்கள அரசன் சிலாமேகனின் மனைவி சாரதஸ்ரீயின் மகள் லீலாவதி. அவள் சாதவாஹன மன்னன் ஹாலனின் சித்திரத்தைக் கண்டும், கனவில் அவனைக் கண்டும் காதலித்து அவனையே மணக்க முடிவு செய்கிறாள். சாதவாஹன மன்னன் சிங்கள நாட்டின் மேல் போர் தொடுக்கப் புறப்படும்போது புயலிற் சிக்கிக் கப்பல் கோதாவரி நதிக்கரையிலேயே நின்றுவிடுகிறது. அப்பகுதி யில்தான் லீலாவதியும் காதலனைத் தேடி வருகிறாள். பாசுபத சன்யாசி மூலம் இச்செய்தியறிந்த சாதவாஹனன் லீலாவதியைத் தேடிச் சந்தித்து மணம் புரிந்துகொள்ள விரும்புகிறான். லீலாவதி, தன் தாயாருடைய சகோதரி வசந்தஸ்ரீயின் மகள் மகானுமதி என்பவள் தன் காதலனைப் பிரிந்து இருப்பதால் அவர்கள் திருமணம் முடிந்த பிறகே தான் திருமணம் புரிவேன் என்கிறாள். மகானுமதியின் காதலன் மாதவானிலன் பாதாள உலகில் சிறைப் பட்டிருக்கிறான். சாதவாஹனன் தனது குரு நாகார்ச்சுனருடன் பாதாளம் சென்று அவனை மீட்டுக்கொண்டுவந்து பின்னர் லீலாவதியை மணக்கிறான்.

காதாசப்த சதியைத் தொகுத்த ஹாலசாதவாகன மன்னனைப் பற்றிய புனைந்துரைக் கதையே இது. 1800 செய்யுட்களையுடைய காதற் காவியம் இது.

இந்நூலில் மலயம் எனப்படும் பொதிகை மலை பற்றியும் கேரள நாட்டைப் பற்றியும் வருணனைகள் உள்ளன. இஃது தமிழ் நாட்டின் வருணனைதான்.

**லீலாவதியில் உள்ள சில கவிதைகள்**

"நற்குடிப் பிறந்த எல்லாப் பெண் மக்களும் பருவம் எய்தாத வரைக்கும் நன்மகிழ்ச்சியைத் தருகின்றனர்".

"இவ்வுலகில் தமது கன்னியரைப் போல மனதுக்குத் துன்பம் தரும் பொருள் வேறில்லை. அக்கன்னியருக்காக மனம் நிறைவு தரும் வரன் மூவுலகில் தேடினாலும் கிடைப்பது அரிது".

"தஹ வி ஹூ மா தம்ம
  தும்ம மா ஜூரஸூ மா விமும்ச அத்தாணம்
கோ.தே[3]இ ஹரஇ கோவா
  ஸூஹரஸூஹம் ஜஸ்ஸஜம் விஹியம்"

''எந்த நிலையிலும் வருந்துவது கூடாது. கவலைப்படுவது கூடாது. தன்னை இழத்தலும் கூடாது. ஏனென்றால் விதிக்கப்பட்டவற்றை இன்பதுன்பங்களை யாரும் தருவது மில்லை. யாரும் நீக்குவதுமில்லை''.

## குமாரபால சரிதம்

கலிகால சர்வக்ஞர் எனப் புகழ்ப்பட்ட பேராசிரியர் ஹேம சந்திரர் கி. பி 1088இல் பிறந்தவர். கி. பி. 1173இல் காலமானார். இலக்கணம், நிகண்டு, அணி நூல், செய்யுள், இலக்கியம், கலை, தத்துவம் முதலிய பல துறைகளிலும் புகழ் மிக்க படைப்புகள் நல்கியுள்ளார். வடமொழி பிராகிருதம் இரு மொழியிலும் இலக்கண, இலக்கிய நூல்கள் படைத்தவர். இவரது சிறந்த படைப்பு குமாரபாலசரிதம் எனும் பிராகிருத மொழிக் காவிய மாகும். இந்நூல் புணே பண்டார்க்கர் ஓரியண்டல் இன்ஸ்ட்டிட் யூட்டால் வெளியிடப்பட்டுள்ளது.

அணஹில்லநகரத்தரசன் குமாரபாலனின் தினசரி அலுவல் களுடன் கதை தொடங்குகிறது. பருவகால வருணனைகள் தொடர்கின்றன. அரசியல் விவகாரங்கள், சமணமத வழிபாடுகள் கூறப்படுகின்றன. துறவற மேன்மை கூறப்படுகிறது. பாணினியின் வியாகரண நூலாகிய 'அஷ்டாத்தியாயி'க்கு விளக்கக் காவியமான பட்டி காவ்யம் போல, அவரது இலக்கண நூலுக்கு இலக்கியமாக அமைத்த காவியம் குமாரபால சரிதம். இருபது சருக்கங்கள் இதில் அமைந்துள்ளன.

## ஸ்ரீ சிஹ்ன காவியம்

சிரிசிந்த கவ்வ எனும் ஸ்ரீசிஹ்ன காவியம் பட்டி காவியம் போல வரருசியின் பிராகிருத பிரகாசம் எனும் இலக்கண நூலுக்கு விளக்கமான இலக்கியமாகும். 12 சருக்கங்கள் உள்ளன. ஒவ்வொரு சருக்கத்தின் இறுதியிலும் ஸ்ரீ என்ற சொல் குறிக்கப் படுவதால் ஸ்ரீசிஹ்ன காவியம் என்ற பெயரைப் பெற்றது. கோவிந்தாபிஷேகம் என்பது மற்றொரு பெயராகும். இக்காவியம் கவிசார்வ பௌமர்—கிருஷ்ணலீலா சுகர் இயற்றியதாகும். கேரள நாட்டைச் சார்ந்தவர். 13ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இந்நூல் கண்ணன் திருவிளையாடல்களைக் கூறுவதாகும். கவிதைச்சிறப்பின்றி யுள்ளது.

## சௌரி சரிதம்

கேரள நாட்டைச் சேர்ந்த கோலத்து நாட்டு கேரள வர்மனின் அவைப் புலவர் ஸ்ரீகண்டர் இயற்றிய சௌரிசரிதம் பதினேழாம் நூற்றாண்டாகும். இந்நூல் முழுமையாகக் கிடைக்கவில்லை. நான்கு ஆசுவாசங்களே கிடைத்துள்ளன. இதுவும் கண்ணனின் கதை கூறும் காவியமாகும்.

திருவனந்தபுரத்தில் கிடைத்த பிருங்க சந்தேசம் கூட முழுமை யாகக் கிடைக்கவில்லை. தூது காவியமான இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

## கம்ஸவதம்

கேரள நாட்டைச் சார்ந்த ராமபாணிபாதர் சமஸ்கிருதம், பிராகிருதம், மலையாளம் ஆகிய மும்மொழிகளிலும் காவிய நாடகங்கள் இயற்றிய கவிஞர். பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். இவரது புகழ் மிக்க படைப்பு கம்சவதம் ஆகும். இந் நூல் தற்போது பெருவழக்காகப் பயிலப்பட்டு வருகிறது. நான்கு சருக்கங்கள் கொண்ட சிறுகாவியம். 233 செய்யுட்கள் உள்ளன. கண்ணன் கம்சனைக் கொன்ற வரலாறு கூறுகிறது.

## உஷா அனிருத்தம்

இவரது மற்றொரு சிறிய காவியம் உஷாஅனிருத்தம் என்பதாகும். இது உஷை—அனிருத்தரின் பிரசித்தமான காதல் கதையைக் கூறுவதாகும். நான்கு சருக்கங்களில் வருணித்துள்ளார். பாணன் மகள் உஷை—கண்ணனின் பேரன் அனிருத்தன். பாணன் அனிருத்தனைச் சிறையிடுகிறான். கண்ணன் போரிட்டுக் காதலர் கட்குத் திருமணம் செய்விக்கிறான்.

தமிழ்நாட்டைச் சேர்ந்த பலரும் பிராகிருதத்தில் பல நாடகங் கள், சிறுகாவியங்கள் இயற்றி உள்ளனர். ரகுநாத நாயக்கர் அவையிலிருந்த ராமபத் ராம்பா, மதுரவாணி எனும் பெண் கவிஞர் பிராகிருத மொழியில் புலமை மிக்கவர். இவர்களது படைப்புகள் வடமொழியில் கிடைத்ததெனினும் பிராகிருதப் படைப்புகள் கிடைக்கவில்லை. தஞ்சை மன்னன் துளஜாஜியின் அமைச்சராகிய கனஸ்யாமர் தமது நீலகண்ட சம்பு எனும் நூலில் குறிப்பிட்டபடி, சமஸ்கிருதத்தில் அறுபத்து நான்கு நூல்களும், பிராகிருதத்தில் இருபது நூல்களும், மராட்டியில் ஒரு நூலும் இயற்றியதாகத் தெரிகிறது.

வேதாந்ததேசிகர் (1268—1369) வடமொழியில் நூற்றுக்கு மேற்பட்ட நூல்கள் இயற்றியுள்ளார். இவர் பிராகிருதத்தில் "அச்சுத சதகம்" எனும் நூறு பாடல்கள் உள்ள துதி நூல் இயற்றி யுள்ளார்.

ரத்தகேட ஸ்ரீனிவாச தீக்ஷிதர் (1465—1550) பிராகிருதம் உட்பட ஆறு மொழிகளில் பண்டிதர். அப்பய்ய தீக்ஷிதர் (1554—1626) வடமொழியில் நூற்றுக்கு மேற்பட்ட நூல்கள் இயற்றியவர். இவர் பிராகிருத சந்திரிகா எனும் இலக்கணநூல் இயற்றியுள்ளார்.

## நாடகங்கள்

பிராகிருத மொழியில் பல நாடகங்கள் உள்ளன. நாடகங்களை நாடகம், பிரகசணம், டிமம், வியாயோகம் ஷீதி, முதலிய பலவாகப் பகுப்பர். சட்டகம் என்ற பகுப்பும் உண்டு. ஏ. என். உபாத்யே சட்டகம் என்ற சொல் தமிழில் உள்ள ஆட்டம் என்ற சொல்லி லிருந்து உருவாகியிருக்கலாம் என்ற கருத்தைச் சொல்லியிருக் கிறார். ஹேமசந்திரர் தம் காவியானு சாசனத்தில் சட்டகம் ஒரே மொழியில் இருத்தல் வேண்டும் என்றும், நாடகத்தில் போல சமஸ்கிருதம், பிராகிருதம் ஆகிய இரு மொழி பயன்படுத்தல் கூடாது என்றும் கூறுகிறார். பாவபிரகாசத்தில் சாரதாதனயர் (12ஆம் நூற்றாண்டு) சட்டகத்தில் நாட்டியம் முதன்மை பெறும் என்று கூறுவார். சாஹித்ய தர்ப்பணம், சட்டகம் பிராகிருத மொழியில் அற்புதச்சுவை மிகுந்து அமைதல் வேண்டும் என்று கூறுகிறது.

வடமொழி நாடகங்களில் எல்லாம் மேன்மக்கள் சமஸ்கிருத மும், பெண்களும் ஏவலரும் பிராகிருதமும் பேசும் முறையைக் காணலாம். சட்டகத்தில் அனைவருமே பிராகிருதம் பேசுவர். இந்த வகை நாடகங்கள் பல பிராகிருதத்தில் உள்ளன.

## கற்பூரமஞ்சரி

காசுமீர நாட்டைச் சேர்ந்த மாபெரும் கவிஞன் ராஜசேகரன். கி. பி 880—920இல் வாழ்ந்த கவிஞன். பல மொழிகளையும் பல நாடுகளையும் நன்கறிந்தவன். பல துறைகளிலும் சிறந்து விளங்கிய கவிஞன். சமஸ்கிருதத்தில் பாலராமாயணம் எனும் நாடகமும் பாலபாரதம் எனும் காவியமும் காவியமீமாம்சா என்ற கவிதை யியல் குறித்த இலக்கண நூலும் படைத்துப் புகழ் பெற்ற கவிஞன். இவன் படைத்த சிறந்த பிராகிருத மொழி நாடகம் கற்பூரமஞ்சரி ஆகும். வித்தசால பஞ்சிகா எனும் நூலும் படைத்துள்ளான்.

இக்கவிஞன் மகாராஷ்டிரத்தைச் சேர்ந்த யாயாவர குலத்தி லுதித்த அந்தணன் ஆவான். கன்னோஜ் மன்னன் மஹேந்திர பாலன், அவனை அடுத்துப் பட்டத்திற்கு வந்த மஹிபாலன் ஆகியோருக்குக் குருவாகவும் அமைச்சனாகவும் திகழ்ந்தான். வாரணாசிக்குச் சென்று அங்கே மறைந்தான். பாரதநாடு முழுதும் சுற்றித்திரிந்த ராஜசேகரன் தன் பட்டறிவையும் படிப்பறிவையும் காவிய மீமாம்சையில் நன்கு பயன்படுத்தி உள்ளான். இவன் இயற்றிய ஹரவிலாசம், புவன கோசம், ரத்ன மஞ்சரீ, அஷ்டபத்ர தலாகமலம் முதலிய நூல்கள் தற்போது கிட்ட வில்லை. இவன் மனைவி அவந்திசுந்தரி புலமை மிக்க க்ஷத்திரிய குலப்பெண் ஆவாள். இவள் பிராகிருத மொழியில் பெரும் புலமை பெற்றவள் என்பது ஹேமசந்திரரின் தேசீநாம மாலாவில் உள்ள குறிப்பால் புலப்படுகிறது. ராஜசேகரனின் ஔசித்ய விசார சர்ச்சாவில் உள்ள ஒரு சுலோகம்.

> ''கன்னடப் பெண்டிரின் பற்குறிபட்டவனும், மராட்டியப் பெண்டிரின் கடைக்கண்ணால் வீழ்த்தப்பட்டவனும், பேரிளம் ஆந்திரப் பெண்டிரின் முலையால் நெருக்கப்பட்டவனும், காதலியின் புருவ வளைவால் பயமுறுத்தப்பட்டவனும், லாடதேசப் பெண்டிரின் தோள்களால் சுற்றப்பட்டவனும், மலய (தமிழ்) பெண்டிர் தம் சுட்டுவிரலால் மருட்டப்பட்டவனு மாகிய ராஜசேகர கவியாகிய நான் இப்போது வாரணாசியை நாடுகிறேன்'' என அமைந்துள்ளது.

கற்பூரமஞ்சரி, நான்கு அங்கமுடைய சட்டகம் எனப்படும் நாடகமாகும். மன்னன் சந்திர பாலன், ராணி விக்கிரலேகா, விதூஷகன் கபிஞ்சலன், தோழி விசட்சணா ஆகியோர் பூங்காவில் கவிதைத் திறனாய்வு குறித்துப் பேசுவதாக நாடகம் தொடங்கு கிறது. பைரவானந்தர் எனும் சைவ வாமமார்க்க யோகி தம் யோக மகிமையால் விதர்ப்ப ராஜகுமாரி கற்பூரமஞ்சரியை வரவழைத்து மன்னனுக்குக் காட்டுகிறார். மன்னனும் கற்பூர மஞ்சரியும் காதல் கொள்கின்றனர். ராணி இவ்விருவரும் கலந்து கொள்ளாதிருக்கக் கட்டுப்பாடுகள் உண்டாக்குகிறாள். அதனால் விரகவேதனையுறுகின்றனர். பைரவானந்தரின் முயற்சியால் மன்னன் அரசியின் அனுமதியுடன் கற்பூரமஞ்சரியை மணந்து கொள்கிறான்.

ராஜசேகரன் பிராகிருத மொழியைப் பற்றிக் கூறும் புகழ்மிக்க கவிதையாக

சமஸ்கிருத நடை கடினமானது. பிராகிருத நடை மேன்மை யானது. அவற்றுக்கு ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள வேறு பாடு அமைந்துள்ளது' (—8)

என்பது பேசப்படுகிறது.

பிராகிருத மொழி பெண்போல மென்மையும் இனிமையும் உடையது என்று கவிஞன் கூறுகிறான். கற்பூரமஞ்சரி நாடகத்தின் தொடக்கத்தில் அமையும் கவிதையியல் குறித்த பகுதி :

தேவி: துதிபாடகர் கூறியதுபோலப் பொதிகைத்தென்றல் வீசுகிறது. இலங்கைத் தோரணமாலையை அசைவித்தும், அகத்திய முனிவர் ஆசிரமத்தின் சந்தன மரம், கற்பூரமரம், கொடிகளைத் தழுவியும், கருமிளகு (கங்கோல) களை நடுங்கச் செய்தும், நாகவல்லிக் (வெற்றிலை) கொடிகளை நாட்டிய மாடச் செய்தும், தாமிரபர்ணித் தண்ணீரை முத்த மிட்ட வாறு சித்திரைத்தென்றல் உலாவருகின்றது.

'வசந்தருதுவில் இளநங்கையரே! செருக்கினை விடுக! கடைக் கண் வீச்சுக்களைக் காதலர்பால் செலுத்துக! முலைச் செறிவுடைய இளமை ஐந்தோ பத்தோ நாட்கள் தான் இருக்கும்'' என்று காமதேவனின் ஆணையை எல்லா உலகுக்கும் சித்திரை விழாவில் எடுத்தியம்புவது போல பூங் குயில்கள் இன்னிசையில் சாற்றுதல் கேட்பீராக.''

விதூஷகன் : உங்களிடையே நான் ஒருவன்தான் மூடனாக இருக்கிறேன். ஏனென்றால் என் மாமனாருக்கு மாமனார் வீட்டில் புத்தகக் கட்டுகளைச் சுமந்ததுதான் கண்டபலன்.

தோழி : [நகைத்து] அப்படியானால் உனக்குப் பரம்பரையாக வந்த பாண்டித்தியம் என்று சொல்!

விதூஷகன் : [சினந்து] தாசி மகளே! கூட்டிக்கொடுப்பவளே! அவலட்சண முட்டாளே! நீ கூட கேலி செய்யும்படியாக நான் மூடனாகி விட்டேனா? பிறமக்களைக் கெடுப்பவளே! சளசள வென்று பேசும் சண்டைக்காரியே! என் பரம்பரைப் பாண்டியத்தில் என்ன குற்றம் கண்டாய்? அகால்ஜலத வம்சத்தில் உதித்த எனது பாண்டித்யத்தைப் பார்! கையில் வளையல் அணிய கண்ணாடி தேவையா?

தோழி : [சிந்தித்து] அப்படியா? குதிரையின் வேகத்துக்குச் சாட்சி கூறத் தேவையில்லை! நீ வசந்தத்தை வருணனை செய்க,

விதூஷகன் : கூண்டுக்குள்ளிருக்கும் மைனா போல பிதற்றிக் கொண்டிருக்கிறாய்! உனக்கொன்றும் தெரியாது. ஆதலின் அன்புடைத் தோழனான மன்னன், தேவியரின் முன்பு படித்துக்காட்டுகிறேன். கஸ்தூரி குக்கிராமத்திலோ. காட்டிலோ விற்கப்படுவதில்லை. பொன், கட்டளைக்கல்லில் அன்றி வேறெங்கும் உராயப்படுவதில்லை.

மன்னன் : இனிய நண்ப! அதைப்படி, கேட்போம்.
[விதூஷகன் படிக்கிறான்]

''நொச்சிமரம் வெண்சோறு போன்ற பூங்கொத்தைத் தாங்கியுள்ளது எனக்குப் பிரியமானது. கடைந்த எருமைத் தயிர் போன்ற கொத்துமல்லிப் பூங்கொத்தும் எனக்குப் பிரியமானது''.

தோழி : [நகைத்து] உன் வசனம் உன் மனைவியை மகிழ்விக்கும் தகையதாகும். [கவிதை யன்று]

விதூ : அப்படியானால் பெரிதாகப் பேசுபவளே! நீ படி,

தேவி : தோழி விசட்சணா! எங்கள் முன்பு உன் கவிதையைப் படித்துக் காட்டு. ஏற்கனவே படித்துக் காட்டிச் செருக்கடைந்துள்ளாய்! உன் சொந்தக் கவிதையை அரசர் முன்பாகப் படித்துக்காட்டு! எது சபையில் படித்துப் பாராட்டப் படுகிறதோ அதுவே சிறந்த கவிதையாகும். உரைகல்லில் உரசிப் பார்த்ததே சிறந்த பொன்னாகும்! கணவனை மகிழ்விப்பவளே சிறந்த மனைவியாவாள். குலம் சிறப்புறச் செய்பவனே நன் மகன் ஆவான்.

தோழி : தேவியின் கட்டளைப் படியே.
இலங்கை மலைச்சாரலில் நழுவி வீழ்ந்து,
கலவியில் களைப்புற்ற நாக கன்னியரின்
கவளம் (உண்டி) ஆகி எளிமை எய்திய
பொதிகை இளந்தென்றல், பிரிவுற்ற மங்கையரின்
நெட்டுயிர்ப்புக்கள் சேர்ந்ததால் மீண்டும்
முழுமைபெற்று இளமை எய்தி வருகின்றது''.

மன்னன் : விசட்சணா தன் பெயருக்கேற்பவே மிகத் திறமையாகக் கவிதை இயற்றியிருக்கிறாள்! கவியரசி என்றே கூறலாம்.

விதூஷகன் : [கோபமாக] நேராகச் சொல்ல வேண்டியதுதானே! கவிதையில் விசட்சணா மிக உயர்ந்தவள்! கபிஞ்சல பிராமணன் மிகவும் தாழ்ந்தவன் அப்படித்தானே!

தோழி : அண்ணலே! கோபப்படாதீர்கள். தங்கள் கவிதையில் சொல் அழகு இருக்கிறது! பொருள் அழகு இல்லை. தங்கள் கவிதை தங்கள் மனைவியை மட்டும் மகிழ்வுறுத்தும். தொங்கும் முலைகளில் முத்தாரம் போலவும், தொந்தி படைத்தவனுக்கு இரவிக்கைபோலவும் குருட்டுக் கண்ணுக்கு மைதீட்டியது போலவும் அழகு பெறவில்லை.

விதூஷகன் ; உனது கவிதையில் பொருட்சுவை இருந்தாலும் சொற்சுவை இல்லை. பொன் மேகலையில் இரும்பு மணிகள் கோத்தாற் போலவும், சிதைந்த மாற்றுடையில் சித்திர வேலைப்பாடு போல, சிவந்த வண்ணப் பெண்ணுக்குச் சந்தனத் திலகம் தீட்டியதுபோல, அழகு தரவில்லை. எனினும் பாராட்டப்படுகிறாய்.

கற்பூரமஞ்சரியில் சில கவிதைக் கருத்துகள் :

மன்னன் : நங்கையர் செயற்கையாக அணிகள் ஒப்பனைகள் செய்து பேதையர் மனதைக் கவர்வர் என்பர்! ஆனால் திறமையுடையவர் மனதைக் கவர இயலாது. ஏனெனில் அவர்கள் இயல்பான அழகை விரும்புபவர். திராட்சைச்சாறு இனிப்புக்காகச் சர்க்கரையை நாடுமா?

மன்னன் : மன்னனின் மனைவியானாலும், சாதாரணக் குடி மகனின் மனைவியானாலும் அவர்களது காதலன்பில் எட்டுணையும் வேறுபாடில்லை. வேண்டுமானால் செல்வச் செழிப்பால் மணி யணிகள், ஆடைகள், குங்குமம் முதலிய வற்றில்தான் வேறுபாடிருக்க முடியும்.

கற்பூரமஞ்சரி—மிகச்சிறந்த பிராகிருத மொழிப் படைப்புகளில் ஒன்றாக மதிக்கப்படுகிறது. கவிதைத்துறையில் சிறந்த விமரிச கனான கவிஞன் ராஜசேகரனின் அனுபவ முத்திரைகள் இந் நாடகத்தில் தெளிவாகப் புலப்படுகின்றன.

## விலாசவதி

பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த பிராகிருத சர்வஸ்வம் எனும் நூலைப் படைத்தவரான மார்க்கண்டேயர் விலாசவதி எனும் நாடகம் இயற்றியுள்ளார். இந்நூல் தற்போது கிடைக்க வில்லை.

## சந்தலேகா

கோழிக் கோட்டினைச் சேர்ந்தவரும் பதினேழாம் நூற்றாண் டினருமாகிய ருத்ரதாசன்—சந்தலேகா எனும் நாடகம் இயற்றி

யுள்ளார். இந்நூல் கற்பூரமஞ்சரியைப் பின்பற்றி எழுதிய படைப்பாகும்.

## ஆனந்த சுந்தரி

மகாராட்டிரத்தைச் சேர்ந்த பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த கனசியாம் என்னும் கவிஞர் இயற்றிய நாடகம் ஆனந்த சுந்தரி. இக்கவிஞர் தஞ்சாவூர் அரசர், முதல் துக்கோஜியின் அமைச்சராக இருந்தார். இவர் சமஸ்கிருதத்தில் 64 நூல்களும் பிராகிருதத்தில் 20 நூல்களும் படைத்தவராவர். இவர் வைகுண்ட சரிதம் என்றொரு பிராகிருத நாடகமும் இயற்றியுள்ளார்.

## சிங்கார மஞ்சரி

மாராட்டிய மாநில அல்மோராவைச் சேர்ந்த பதினெட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த விஸ்வேஸ்வர கவி சிங்காரமஞ்சரி எனும் நாடகமும், நவமாலிகா என்ற நாடகமும் இயற்றியுள்ளார். இவை கற்பூரமஞ்சரியைப் பின்பற்றி எழுந்த படைப்புகளாகும்.

## ரம்பாமஞ்சரி

பதினான்காம் நூற்றாண்டைச் சார்ந்த மராட்டியரான நயசந்திரர்—ரம்பாமஞ்சரி எனும் நாடகம் படைத்துள்ளார். இந் நூலும் கற்பூரமஞ்சரியைப் பின்பற்றி இயற்றிய படைப்பாகும்.

மேகசந்தேசம் என்ற காளிதாசனின் புகழ் மிக்க படைப்பைப் பின்பற்றிப் பிற்காலத்தில் பற்பல தூது நூல்கள் உருவாகின. அது போன்றே ராஜசேகரனின் கற்பூரமஞ்சரியைப் பின்பற்றி பிராகிருதத்தில் பல நாடகங்கள் இயற்றப்பட்டன. பின்வந்த நாடகங்களில், முதல் நூலின் எழிலும் கவிச்சுவையும் இன்றி, புலமை சார்ந்த செய்யுளாக்கத் திறமையே மேலோங்கி இருக்கக் காண்கிறோம்.

## வசுதேவ ஹிண்டி

பிராகிருத மொழிக் கதைக் காவியங்களில் வசுதேவ ஹிண்டி, புகழ்மிக்க படைப்பாகும். கண்ணனின் தந்தை வசுதேவரின் வரலாறு கூறும் பாங்கில் அவரது பல பயணங்களைக் கூறும் வகையில் புராணங்களைப் போன்றமைந்துள்ள நூல் இது. ஹிண்டி (பிரமணம்) என்பது சுற்றித்திரிதல் என்று பொருள்படும். வசுதேவன் சுற்றித்திரிந்து பெற்ற அனுபவங்களைக் கூறும் நூல் என்ப் பொருள்படுகிறது.

இந்நூல் இரண்டு பாகங்களைக் கொண்டது. முதல் பாகத்தில் 26 இலம்பகமும் 11,000 சுலோகங்களும், இரண்டாம் பாகத்தில் 71 இலம்பகமும் 17,000 சுலோகங்களும் உள்ளன.

முதல் பாகத்தைச் சங்கதாசகணியும், இரண்டாம் பாகத்தைத் தர்மசேனகணியும் இயற்றியுள்ளனர். இவரது காலம் ஐந்தாம் நூற்றாண்டாகும். இந்நூலில் தீர்த்தங்கரர் கதைகள், பாண்டவர்' கௌரவர் கதைகள், பிருகத் கதையில் உள்ள நரவாஹனதத்தன் கதைகள் மற்றும் பல துணைக்கதைகள் உள்ளன.

ஜெர்மனியைச் சேர்ந்த ஆல்ஸ்டோர்ப் இந்நூல் குணாட்டி யரின் பிருஹத் கதையின் தழுவல் என்று கூறியுள்ளார். முதலில் ஜம்பூஸ்வாமி குபேரதத்தன், மஹேஸ்வரதத்தன் முதலியவர் கதை கூறப்படுகிறது. பின் வசுதேவர் பிறப்பு கூறப்பட்டுள்ளது. தம்மில்லகன் கதை வருகிறது. தம்மில்லகன் திருமணம் முடிந்த பிறகும் இரவில் படிப்பதும் எழுதுவதிலுமே ஆர்வம் காட்டுகிறான். அவன் படிப்பதைக் கண்டித்து புதுமணப் பெண்ணுடன் கூடி யிருக்குமாறு கூறுகிறாள்.

பெண்ணைப் பெற்றவரும் கடிந்துரைக்கின்றனர். அப்போது தம்மில்லகன் தாய், தன் கணவனிடம் புகார் கூறியபோது அவன் கூறுகிறான்.

> "உனக்கு அறிவில்லை! மகன் படிப்பில் மூழ்கி இருப்பது குறித்து மகிழவேண்டுமேயன்றிக் கவலைப் படுவானேன்? புதுப்புது வித்தைகளை நினைவிலிருத்தாவிட்டால் எண்ணெய் இல்லாத விளக்குப்போலப் பிரகாசிக்க முடியாது. ஆதலின் படிப் பார்வத்தைக் கெடுக்க வேண்டாம்."

அதற்கு அவள் கூறுகிறாள்.

> "மிகவும் படிப்பதனால் என்ன பயன்? மனித வாழ்வின் இன்பங் களையும் இழக்க நேரிடுகிறது."

இவ்விதம் தம்மில்லகனை உலகியலில் ஈடுபடத் தூண்டவே அவன் தன் மனைவியைவிட்டு வசந்ததிலகா எனும் கணிகையை நாடுகிறான். இதனால் தாயும் மனைவியும் வருந்துகின்றனர். பின் தம்மில்லகன் அகடதத்த முனிவரின் தரிசனத்தால் அறிவு பெற்று நன்னிலையுறுகிறான்.

மற்றொரு கதையில் கிரேக்க நாட்டுத் தூதன் கௌசாம்பிக்கு வருவதாகக் கூறப்பட்டுள்ளது.

'தீயால் ஒளிரும் கொள்ளிக்கட்டை போல, பாம்புடன் கூடிய பூங்கொடி போல உள்ள காம மார்க்கத்தை விட்டுவிட வேண்டும் அப்போதுதான் இன்புற முடியும்''

என்பது இதில் வரும் ஒரு கவிதை.

ருஷப தேவராகிய ஆதிபகவனின் வரலாறு கூறப்படுகிறது. வசுதேவர், கம்சன், முதலியவர் வரலாறுகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இடை இடையே தத்துவக் கருத்துகளும் உள்ளன. சுவை மிக்க பல கதைகள் உள்ள இந்த நூல் ஆய்வாளர் விரும்பிப் படிக்கும் நூலாகும்.

## ப உ ம சரிய

பிராகிருத மொழியின் மற்றொரு பேரிலக்கியமான பஉம சரிய (பதும சரிதம்) குறித்து சிறிது விளக்கமாகக் காண்பது நன்று. பதும என்பது இராமனது பெயர். இந்நூல் சமண மரபில் உள்ள இராமாயணம் ஆகும். வால்மீகி ராமாயணத்தைத் தழுவிய தேனும் பல முரண்பாடுகள் உண்டு. 118 பருவங்கள் உடைய பெருநூல். ஆசாரிய ராஹுவின் சீடரின் சீடர் என்றும் நாகில வம்சத்தவர் என்றும் கூறப்படும்.

விமலசூரி நூலாசிரியர். மகாவீரரின் மறைவுக்குப்பின் 530 ஆண்டு கழித்து கி.பி. 60இல் இந்நூல் இயற்றியதாக நூலாசிரியர் கூறும் குறிப்பு உள்ளது. எனினும் பேராசிரியர் ஜாகோபி ஆய்ந்து இந்நூல் கி.பி. நான்காம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதாகக் கூறுகிறார்.

வான்மீகி ராமாயணம் நம்பற்கரிய புனைந்துரைகளுடன் கூடி இருப்பதாகவும் அறிஞர் அதனை ஏற்கவில்லை என்றும் விமலசூரி குறிப்பிடுகிறார். கும்பகருணன் ஆறுமாதம் தூங்குவது; யானை, எருமைகளைச் சாப்பிட்டது, போன்றவை பொய் என்றும் இராவணன் இந்திரனை வென்றது பொய் என்றும் கூறுகிறார்.

மஹாவீரரின் சீடராகிய கௌதமகணதரர் சிரேணிக மகாராஜா (பிம்பிசாரன்) கேள்விக்குப் பதில் கூறுவதாக இக்கதை அமைந்துள்ளது. முதலில் ருஷப தேவரின் வரலாறு கூறப்படுகிறது. இக்ஷ்வாகு வம்சம் குறித்தும் கூறப்படுகிறது. வானரர் வித்தியா தரர் என்றும் அவர்களது கொடியில் குரங்குச் சின்னம் இருந்தது என்றும் குறிப்பிடுகிறார். இராவணனுக்கு ஒரு தலைதான் என்றும் அவன் பிறந்ததும் அவன்தாய் ஒரு ஆரம் கழுத்தில் அணிவித்த

தாகவும் அதில் ஒன்பது தலைகள் பிரதிபலித்துத் தோன்றியதால் தசமுகன் என்று பேரிட்டதாகவும் கூறப்படுகிறது. இராவணன் மண்டோதரியை மணத்தல், கும்பகருண, விபீஷணரின் திருமணம், இந்திரஜித் பிறப்பு, இராவணன், குபேரன் போர் முதலியன வருணிக்கப்படுகின்றன.

வாலிசுக்கிரீவர் சரிதம், கரதூஷணன் சந்திரநகாவை மணத்தல், வாலி இராவணனை வெல்வது, இராவணன் திக்விஜயம் செய்வது ஆகியன வருணிக்கப்படுகின்றன. இராவணன் ஜினபக்தி யுடன் பல கோயில் கட்டுகிறான். நாரதர் வரலாறும் அவர் வேள்வி குறித்துக் கூறுவதும் வருணிக்கப்படுகின்றன.

நாரதர் கூறுகிறார். "உடலாகிய வேதிகையில் அறிவாகிய நெய் சொரிந்து மனம் ஆகிய தீ வளர்த்து அதில் தரும் எனும் மரக் கட்டைகள் போட்டெரிக்க வேண்டும். குரோதம், மானம், மாயா, லோபம் ராகத்துவேஷங்களைப் புலன்களுடன் கூடி அழிக்க வேண்டும். சத்யம், அஹிம்சை, பிரம்மசரியம் ஆகிய தேவதை களுக்கு ஆராதனை செய்யவேண்டும். பகவான் ஜினன் கூறிய இந் நெறியே வீடுபேறு தரும்". பவனஞ்சய—அஞ்சனாசுந்தரியரின் திருமணம், அனுமன் பிறப்பு வருணிக்கப்படுகிறது. இவர்கள் இராவணனின் உறவினர். பின்னர் ஜனகர், தசரதன் ஆகியோர் வரலாறு கூறப்படுகிறது.

தசரதன் அபராஜிதா (கோசலை), கைகேயி, சுமித்ரா ஆகிய மூவரை மணத்தல், கைகேயி போரில் உதவியதற்காகத் தசரதன் வரம் தருதல், பின்னர் அபராஜிதாவிற்குப் (கோசலை) பத்மன் (இராமன்), பிறக்கிறான். சுமித்ரா இலக்குவனையும், கைகேயி பரத சத்ருக்கனரையும் பெற்றதாகக் கூறப்படுகிறது. சீதையின் பிறப்பு, சீதையின் சுயம்வரம், சீதையை வில் முறித்து இராமன் மணத்தல் கூறப்படுகின்றன. தசரதன் துறவு பூண்கிறான். கைகேயி வரத் தினால் பரதனிடம் ஆட்சி ஒப்படைக்கப்படுகிறது. இராமனும் மகிழ்வுடன் வனம் செல்கிறான். சீதையும் இலக்குவனும் உடன் வருகின்றனர். தண்டகாரண்யத்தில் கரதூஷண்ன் மனைவி சந்திரநகா (சூர்ப்பனகை). இவர்களது மகன் சம்புகனை இலக்குவன் கொல்கிறான். இராவணன் சகோதரியாகிய சந்திர நகா, தமையனிடம் சென்று தன் மகனைக் கொன்ற செய்தி கூறி அழுகிறாள். இராவணன் புட்பக விமானத்தில் வந்து சீதையைக் கவர்ந்து செல்கிறான். இராமன் வானரசேனையுடன் இராவண னுடன் போர்புரிகிறான். இலக்குவன் இராவணனைக் கொல்

கிறான். சீதையுடன் மீண்டு வந்த இராமன் ஆட்சியை ஏற்கிறான். பரதன் துறவு பூண்கிறான். சீதையைப் பற்றிய வதந்திகள் அறிந்து இராமன் அவளைக் காட்டுக்கு அனுப்பி வைத்தல், காட்டில் லவகுசனைப் பெறுதல், மீண்டும் இராமன் சீதையைச் சந்தித்தல், அப்போது அக்னி பரீட்சை நடத்துதல், இராமன் சீதையிடம் மன்னிப்பு கோரல், சீதை கூந்தல் களைந்து ஜைனதீட்சை பெற்று துறவு பூணல், இராமன் துறவு பூண்டு நிர்வாணம் அடைதல் என்பனவும் விளக்கப்படுகின்றன. விமலசூரியின் பதுமசரிதம் இராமாயண ஆய்வாளர்க்குச் சிறந்த கருத்துக் களஞ்சியமாகத் திகழ்கின்றது.

இதுகாறும் பிராகிருதமொழி இலக்கியவரலாறு சுருக்கமாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. விரிவான நூல்கள் வெளிவர வேண்டும். பிராகிருத இலக்கிய நூற்பரப்பில் புராணப் பாங்குடைய வசுதேவ ஹிண்டி, பஉம சரிய ஆகிய இரண்டும், காவியங்களாகிய சேதுபந்தம், கௌடவதம் ஆகிய இரண்டும், தொகை நூல்களான காதாசப்தசதி, வஜ்ஜாலக்கம் ஆகிய இரண்டும், கற்பூர மஞ்சரி ஆகிய நாடகம் ஒன்றும் மிகச் சிறந்த உலகப் புகழ்மிக்க படைப்புகளாகும். இராமாயண பாரதங்கட் கிணையாகப் போற்றப்பட்ட குணாட்டியரின் 'பிருகத்கதா' தற்போது பிராகிருதத்தில் கிடைக்காவிட்டாலும் அதன் வட மொழிச் சுருக்கங்களும் தழுவல்களும் கிடைப்பதால் அஃதும் பிராகிருதம் தந்த நன்கொடையாகும். பிராகிருதமும் தமிழும் தொன்மையான இலக்கிய வளமுடைய மொழிகள்; பண்பாட்டுத் தொடர்புடைய மொழிகள். இவ்விரு மொழிப் பேரிலக்கியங் களுடைய ஒப்பீட்டாய்வுகள் மிகுதியும் வரவேண்டும். அதற்கான முயற்சிகளைத் தமிழகப் பல்கலைக் கழகங்கள் தொடங்க வேண்டும்.

என்றுமுள தென்றமிழின் இலக்கிய வளத்திற்குப் பிராகிருத இலக்கியங்கள் மொழிபெயர்க்கப்பட்டுத் துணைபுரிய வேண்டும் என்றும் அதற்குத் தமிழறிஞர் முனைதல் வேண்டும் என்றும் விழைகின்றேன்.

---

## துணை நூற்பட்டியல்


ஆங்கிலம்

1. Collected works of Sir, R. G. Bhandarkar, Bhandarkar Oriental Research Institute, Poona, 1920

2. Life in Ancient India as depicted in Prakrit Literature, K. Kamala Prakrit Academy, Hyderabad, 1984

இந்தி

3. காதா சப்த சதி (உரை), டாக்டர். ஜகந்நாத பாடக்; சௌகம்பா காஸ்ங்க்ரிட் சீரீஸ் ஆபிஸ்; வாரணாசி, 1969

4. பிராகிருத சாஹித்ய கா இதிகாஸ், டாக்டர் ஜகதீசசந்திரஜைன் சௌகம்பா வித்யா பவன்; வாரணாசி, 1961

5. பிராகிருத பாஷாஓம் கா வ்யாகரணன் (ரிசர்ட்பிஷல்), ஹேம சந்திர ஜோஷி; பிஹார் ராஷ்ட்ர பாஷா பரிஷத்; பாட்னா; 1958

சமஸ்கிருதம்

6. காதா சப்த சதி, பட்ட ஸ்ரீமதுரநாத சாஸ்திரி; மோதிலால் பனார்சிதாஸ், 1983

7. ப்ராக்ருத ப்ரகாசம், வரருசி; சௌகாம்பா சமஸ்க்ருத சம்ஸ்தான்; வாரணாசி, 1982

தமிழ்

8. இலக்கிய உதயம், பேராசிரியர் சா. வையாபுரிபிள்ளை;

9. காதா சப்தசதி, மு.கு. ஜகந்நாதராஜா; விசுவ்சாந்தி பதிப்பகம்; இராஜபாளையம், 1981

தெலுங்கு

10. காதா சப்த சதி, வாணிரெட்டி வெங்கடசுப்பய்யா; வாசிலிட்டி பப்ளிகேஷன்ஸ்; குண்டூர், 1968

11. காதா சப்த சதி சாரமு, ரான்னபல்லி அனந்த கிருஷ்ணசர்மா; ஆந்திர சாரஸ்வத பரிஷத்; ஹைதராபாத், 1986

12. காதா சப்த சதிலோ தெலுகுபதாலு, திருமலராமசந்திரா; பிராகிருத அகாடமி; ஹைதராபாத், 1978

பிராகிருதம்

13. காதா சப்த சதி, ஹால

14. கௌடவதம், வாக்பதிராஜன்; ப்ராகிருத் டெக்ஸ் சொசைட்டி; அஹமதாபாத், 1975

15. வஜ்ஜாலக்கம், ஜயவல்லப; ப்ராகிருத கிரந்த பரிஷத்; அஹமதாபாத், 1961

# சிறப்புச் சொல்லகராதி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF
TAMIL STUDIES

டி.டி.டி.ஐ. (அஞ்சல்) தரமணி,
சென்னை-600 113.


## அறக்கட்டளைச் சொற்பொழிவு வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| இஸ்லாம் வளர்த்த தமிழ் | 15 | 00 |
| தமிழரின் தாயகம் | 10 | 00 |
| உ.வே.சா. சங்க இலக்கியப் பதிப்புகள் | 10 | 00 |
| இனிக்கும் இராசநாயகம் | 50 | 00 |
| பாவாணரும் தனித்தமிழும் | 12 | 00 |
| தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள் | 10 | 00 |
| உ.வே.சா. காப்பியப் பதிப்புசள் | 10 | 00 |
| விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் | 20 | 00 |
| அகலமும் ஆழமும் | 12 | 00 |
| செக்கிழுத்த செம்மல் சிதம்பரனார் | 15 | 00 |
| உ.வே.சா. இலக்கணப் பதிப்புகள் | 15 | 00 |
| மகாமதிப்பாவலர் | 11 | 00 |
| உலக முதன் மொழி தமிழ் | 12 | 00 |
| மறைமலையடிகளார் தனித்தமிழ்க் கொள்கை | 15 | 00 |
| தமிழ் தந்த வ.உ.சி. | 15 | 00 |
| உ.வே.சா. ஒரு தமிழ் வாழ்வு | 15 | 00 |
| வண்ணக் களஞ்சியப் புலவரின் குத்பு நாயகம் | 15. | 00 |
| மு.வ. புதினங்களில் தமிழ் - தமிழிலம் | 20 | 00 |
| பாவாணர் ஆய்வு நெறி | 25 | 00 |
| கிறித்தவமும் தமிழகமும் | 15 | 00 |
| நாமக்கல் கவிஞர் கவிதைகள்-தேசியம், காந்தியம் | 16 | 00 |
| தமிழில் அறிவியல்—அன்றும் இன்றும் | 25 | 00 |
| இதழாளர் ஆதித்தனார் | 26 | 00 |
| காந்தியப் பெருந்தலைவர் காமராசர் | 20 | 00 |
| மலையாளக் கவிதை | 15 | 00 |
| நாட்டுப்புறப் பாடல்களில் வரலாற்றுச் செய்திகள் | 18 | 00 |
| நாட்டுப்புறவியலில் உளவியல் பார்வை | 14 | 00 |
| தொல்காப்பியப் பதிப்புகள் | 27 | 00 |